# மக்கள் உரிமை

Presented by
M. Palaniappan
27.7.55

மூலம்: இங்கர்சால்

தமிழ்: ஊடுருவி





கலை  மன்றம்

P.O.No 275 சென்னை-1

முதற் பதிப்பு:- 1952


சாதா பைண்ட் விலை ரூ. 1—0—0
அட்டை பைண்ட் ,, 1—8—0

விற்பனை நிலையம்:-
எம். எஸ். ராமுலு கம்பெனி
286, எஸ்பிளனேட் — சென்னை-1

# சில வார்த்தைகள்!



"மக்கள் உரிமைகளைப் பறிக்காதே" என்ற குரலை அமெரிக்காவிலிருந்து உலகெல்லாம் கேட்க, ஒலி எழுப்பிய பேரறிஞன், இங்கர்சால்! அவன் எழுப்பிய குரலை இப்போதுதான் தமிழ்நாடு தன் காதுகளைத் திருப்பிக் கேட்க ஆரம்பித்திருக்கிறது. இந்த நல்ல சமயத்தில் அவர் எழுப்பிய குரலை நூல்வடிவாக்கி மக்கள் உரிமை என்ற பெயருடன் உங்கள் முன் வைக்கின்றோம், படித்துப் பயன் அடைவீர்கள் என்று!

வணக்கம்

கலைமன்றத்தினர்.

# விருப்பம்

---

ஆஸ்திகர்களின் அக்கிரமங்களைக் கண்டிக்கும் ஆற்றல் அமெரிக்காவில் பேரறிஞர் இங்கர்சால் ஒருவருக்குத்தான் இருந்தது என்றால் அதை எவரும் மறுக்க முடியாது !

நாஸ்திகன் என்று தூற்றப்பட்டாலும், அவரைப் போற்றாதவர்கள் கிடையாது. அவர் பேச்சைக் கேட்க ஆயிரமாயிர மக்கள் கூடுவர். அவர் பேச்சுக்களில் அனல்பொறி தெரிக்கும், அன்பும் ஆட்சிபுரியும், அறிவுத் தெளிவும் அமைந்திருக்கும். உலக மக்களின் அடிமைச் சங்கிலியை, உடைத்தெரிய அரும்பாடு பட்ட அதிசய மனிதர் இங்கர்சால் **1877**-ஆம் ஆண்டில் அவர் ஆற்றிய சொற்பொழிவை **மக்கள் உரிமை** என்னும் பெயர் சூட்டித் தமிழ் நாட்டின் முன், தமிழில் வைக்கின்றேன், நம் நாட்டிற்கு இன்று அந்த நூல் தேவை என்பதை நன்கு உணர்ந்த காரணத்தால், ஏற்று பயன் அடைய வேண்டும் என்பதுதான் என் விருப்பம் !

நாட்டுக்கு பயனுள்ள இது போன்ற நல்ல நூல்களை வெளியிடுவதே தங்கள் நோக்கமெனக் கருதி யிருக்கும் **கலை மன்றத்தினருக்கு** என் நன்றி !

வணக்கம்

“ ஊடுருவி ”

Presented by
M. Palaniappan

# இங்கர்சால்

"இந்த உலகச் சரித்திர முழுவதிலும் யாரும் உண்மையை, அற்புதங்களின் மூலம் விளக்கிக் காட்ட முன்வரவில்லை. உண்மை என்பது அற்புதங்களை வெறுக்கிறது. பொய், பித்தலாட்டம் இவற்றிற்கு மட்டுமே, அற்புதங்கள், அதிசயங்கள் இவற்றின் அத்தாட்சி வேண்டியதாக இருக்கிறது. எவரும் ஓர் அற்புதமும் எக்காலத்திலும் செய்ததில்லை. புத்தியுள்ள எந்த மனிதனும், தான் ஓர் அற்புதம் செய்ததாக நினைத்ததில்லை. இத்தகைய அற்புதம் ஒன்று, யாரேனும் நமது கண் முன்பாக செய்து காட்டும் வரை, இயற்கைக்கு வெளியில் அதற்கு மேலான மேலான ஒரு சக்தி இருப்பதற்கு சாட்சியமில்லை.

* * *

மதாச்சாரியர்கள் நமக்கு நம்பிக்கை இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். மதாச்சாரியர்களாவது, மடாதிபதிகளாவது, யாரவது ஒருவர் ஓர் அற்புதம் செய்து காட்டப்படும். அதன்மேல் நம்புவோம். இயற்கைக்குமேல் ஒன்று இருப்பதாக நமக்குச் சொல்லுகிறார்கள். அப்பரம்பொருள், ஒரு விநாடிக்கு இயற்கையை அடக்கி ஆளட்டும், அதன் மேல் நாம் இவர்களுடைய வீண் அதிகார வார்த்தைகளை ஏற்றுக் கொள்வோம்.

* * *

நாங்கள் எதிர்காலத்துக்கான ஓர் உன்னதமான கோவிலுக்கு அஸ்திவாரம் தோண்டி அடிப்படை போடுகிறோம். அது சகல தெய்வங்களுக்குமான கோவிலல்ல. ஆனால் அது எல்லா மனித சமூகங்களின் கோவிலுமாகும். அதில் சமூக வளர்ச்சியெனும் மதம், அதற்கான கிரியைகளுடன் போற்றிக் கொண்டாடப்படும் மனித சமூகம், இப்பொழுது ஒரு பக்கத்தில் கோடீசுவரப் பிரபுக்களையும், மற்றொரு பக்கத்தில் உடல் நைந்து சாகும் பிச்சைக்காரர்

களையும்; ஒரு பக்கத்தில் அளவுக்கு மிஞ்சிய பொருள்களை யுடைய சோம்பேறித்தனத்தையும், மற்ெருரு பக்கத்தில் பஞ்சமுற்றுத் தவிக்கும் கைத்தொழிலையும்; ஒரு பக்கத்தில் கந்தைகளைச் சுற்றிக் கொண்டிருக்கும் உண்மையையும், மற்ெருரு பக்கம் பட்டாடைகள் உடுத்தி பொன்முடிதரித்த மூடநம்பிக்கையையும் உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறது. இவைகள் ஒழியும் காலத்தை விரைவினில் காண எங்களா லியன்ற பிரயத்தனங்களை நாங்கள் எடுத்துக் கொள்கிறோம். நாங்கள் எதிர்பார்க்கும் காலத்தில் உபயோக மானவை தான் மதிப்பைப் பெறும். அப்பொழுது, 'அறிவு' உலக மக்கள் அனைவருடைய புத்தியெனும் சிங்காசனமேறி, அரசர்களுக்கெல்லாம் அரசனுகவும், தெய்வங்களுக்கெல் லாம் தனிப் பெருந் தெய்வமாகவும், திகழ்பெற விளங்கும்.

* * *

என்ற குரலை, சென்ற நூற்றாண்டில் அமரிக்க நாட்டில் எழுப்பிய பேரறிஞர்தான் "**ராபர்ட் கிரீன் இங்கர்சால்.**" அவர் தன் அறிவுத் தெளிவு நிறம்பிய பேச்சுக்களால் பகுத்தறி வுப் பயிரை வளர்த்தவர்.

1833-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 11-ம் நாள் அமெரிக் காவிலுள்ள நியூயார்க் மாகாணத்தில் "**ட்ரெஸ்டன்**" என்ற ஊரில் பிறந்தார். அவரின் தந்தை "ரெவரெண்ட் ஜான் இங் கர்சால்" என்ற பெயருடையவர். தாய், "மேரி லிவ்விங் ஸ்டோன் என்னும் பெயருடையவள். இங்கர்சால் இரண்டு வயது குழந்தையாய் இருந்த போதே அவரின் தாயார் இறந்துவிட்டார். பின்னர் அவரைக் காக்கும் பொறுப்பு தந்தை ஏற்ருர்.

வேத புத்தகத்தின் ஒவ்வொரு எழுத்தையும் கண்ணை மூடிக்கொண்டு நம்புவார், இல்சார்சாலின் தந்தை. வைதிகப் பழம் என்று சொன்னல் மிகையாகாது. இருந்தாலும் அவ ரிடம் அன்பு ஆட்சி செய்தது; நீதியை நேசித்து வந்தார். அத்துடன் நல்ல தேகக்கட்டுடையவர். எனவே தன் மகனைக் கண்டிப்புடனே வளர்த்து வந்தார்.

இங்கர்சால் தன் தந்தையின் கட்டளைப்படி வேதப் புத்தகத்தை வரிவரியாகவே படித்தார். அப்படிப் படிக்கும் போது அவருக்குப் பல சந்தேகங்கள் தோன்றின. அந்தச் சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்பார், தன் தந்தையிடம்.

அதை விளக்க முடியாமல் விழிப்பார் தந்தை. நாளுக்கு நாள் இங்கர்சாலின் சந்தேகங்கள் அதிகமாகவே, இங்கர் சாலின் தந்தை, தன் மகனிடம் "குழந்தாய் உன் கேள்வி களுக்கு பதில் சொல்ல எனக்குத் தெரியவில்லை. உன் மன சாட்சிக்கு உண்மையான முடிவுகளையே சிந்தித்துத் தெரிந்துகொள்" என்று கூறிவிட்டார். அவர் அப்படி கூறியதால் இங்கர்சால் தன் மூளையை அதிகமாகச் செலவு செய்யத் தொடங்கினர்.

இங்கர்சாலுக்கு விளையாட்டில் அதிக ஆசை. பலருடன் பேசி மகிழ்விப்பது அவருக்கு பிடித்தமான காரியம். இங்கர்சால் அதிகம் படிக்கவில்லை. ஆனல் அதிகமான மூளையைப் பெற்றிருந்தார். ஞாபக சக்தி நிரம்பியிருந்தது, அவரிடம். நன்ருகப் பேசுவதிலும், கதைகள் சொல்வதிலும், மொழிகளைச் சரியாக உச்சரிப்பதிலும் இணையற்று விளங்கினர்.

அந்தச் சிறுவயதிலேயே அனேக நூல்களைத் தானகவே படித்து அதன் சத்துப் பொருள்களை அப்படியே மூளையில் பத்திரப் படுத்தி வைத்துக் கொள்வார். இவ்விதம் தன் அறிவைப் பெருக்கிக் கொண்டு தன் பத்தொன்பதாவது வயதிலேயே அழகிய பாடல்களை இயற்றத் தொடங்கினர். இருபதாம் வயதில் தாமாகவே ஒரு பள்ளிக்கூடத்தை நிறுவி அதில் ஏழை மக்களுக்குச் சம்பள மில்லாமல் கல்வி போதித்து வந்தார்.

அந்தச் சமயத்தில் சில வைதீகர்கள் இங்கர்சாலை அணுகி "ஞானஸ்நான"த்தைப் பற்றி தங்கள் கருத்தென்ன" என்று கேட்டபோது அவர் சிரித்துக்கொண்டே சோப்போடு (**With Soap**) ஞானஸ்நானம் செய்வது நல்லது என்பது என் கருத்து" என்ருர்.

பின்னர் சட்டங்களைப் படித்தார். 1854-ஆம் ஆண்டு வழக்கறிஞகப் பதிவு செய்து கொண்டார். பிறகு "இல்லினய்" பிரதேசத்திலுள்ள "பியோரியா" என்ற இடத்தில் தன் வக்கீல் தொழிலை நடத்தினர். அந்தத் தொழிலின் மூலம் நல்ல வருவாயும், பேரும், புகழும் கிடைத்தன.

1860-ஆம் ஆண்டில் சட்டசபைத் தேர்தலில் ஒரு தேர்வாளராக நின்ருர். இங்கர்சாலை எதிர்த்து "கெல்லாக்" என்ற நீதிபதி நின்ருர். இறுதியில் இங்கர்சால் தோல்வி

அடைந்தார். என்றாலும், அவருடைய தேர்தல் பேச்சுக்கள் மக்களை திகைப்படையச் செய்தன. இங்கர்சால் தன்னை எதிர்த்து நின்ற நீதிபதியை "அடிமைத் தனம்" என்பது பற்றி பேச போட்டிக்கு அழைத்தார். நீதிபதி அடிமைத்தனத்தை ஒழிக்கும் கட்சியைச் சேர்ந்தவராலும், தான் சட்டப்படி நடக்கும் மனிதன் என்றும், அப்போதிருந்த அடிமைகளுக்காக ஏற்படுத்தப்பட்டச் சட்டங்களை அமுல் நடத்த உடன்பாடுடையவர் என்றும் ஒப்புக் கொண்டார். இங்கர்சால் அடிமைத் தனத்தை ஆதரித்துப் பேசுவார் என்று அனைவரும் கருதியிருந்தனர். ஆனால் அவர் அடிமைத் தனத்தை ஒழித்து விடவேண்டும் என்றும், அடிமைத் தனத்தை நிலை நிறுத்திக் காக்கும் தளைகள் எல்லாவற்றையும் தூளாக்க வேண்டும் என்றும், அடிமைகளின் விடுதலைக்காக, தான் எந்த சட்டத்தையும் மீறத் தயாராய் இருப்பதாயும் பேசினார். இந்தத் தேர்தல் சொற்பொழிவுக்குப் பின்னர் இங்கர்சால் இணையற்ற பேச்சாளராகத் திகழ்ந்தரார்.

1861-ஆம் ஆண்டு நடந்த உள்நாட்டுப் போரில் தேசம் பிளவுபடக்கூடாது என்றும் கட்சியின் தீவிரவாதியானார்.

1862-ஆம் ஆண்டு மூடக் கொள்கைகளுக்கு முற்றுப் புள்ளி வைத்த ஒரு மாதரசியை மணந்தார். அவள் பெயர் "ஈவாபார்க்கர்" என்பது. உள்நாட்டுப் போர் நிகழ்ந்த போது போர் வீரராக இருந்தமையால் இவருக்கு 'கர்னல்' என்ற பட்டம் கிடைத்தது. அந்தப் போர் முடிந்தவுடன் மறுபடியும் 1863-ஆம் ஆண்டு முதல் தன் வக்கீல் தொழிலை நடத்தினார்.

அவருடைய முப்பத்து நான்காவது வயதில் இல்லினாய் பிரதேசத்திற்கு "அட்டர்னி ஜெனரல்" என்ற பெரிய பதவியை ஏற்று இரண்டாண்டுகள் நடத்தினார். பின்னர் அவரைக் 'கவர்னர்' பதவி வருக வருக என்று அழைத்தது ஆனால் அவர் அதை மறுத்துவிட்டார்.

அவர் நீதி மன்றங்களில் வாதம் செய்யும்போது, ஜூரிகளைத் தன் வசமாகும்படி செய்து விடுவதில் இணையற்றவர். பெரிய பெரிய சிக்கலான வழக்குகளை, திறமையுடன் வாதித்து வெற்றி காண்பார். இவருடைய பேச்சாற்றலையும் சட்ட அறிவையும், பொறுப்பையும், நியாயத்தையும் கண்டு

ஷியக்காத நீதிபதிகள் கிடையாது. அறிவுச் சுதந்திரத்திற் காகப் பாடுபடுவோரைத் துன்புறுத்த தொடுக்கும் வழக்கு களில் எந்தவிதமான ஊதியத்தையும் எதிர் பாராமல் தானே முன் விழுந்து வாதாடுவார். அப்படி வாதாடும்போது ஒரு தடவை "உலகத்திலேயே மிக மிக முக்கியமான விஷயம் சுதந்திரம். அது உணவைவிட, உடையைவிட, பொருளை விட, வீடுகளைவிட, நிலங்களைவிட, சிற்பம், ஓவியம் முதலிய கலைகளைவிட உயர்ந்தது. இத்தகு இணையிலா மதிப்புடைய மனித சுதந்திரம் என்னும் மாணிக்கத்தைக் காப்பாற்ற நான் எதை வேண்டுமானாலும் இழக்கத் தயாராய் இருக்கி றேன்" என்று அழகாகப் பேசினார்.

அரசியல் விஷயங்களை அவர் அலசிப் பேசும்போது கேட் போர் இதயங்களை அவர் வசப்படுத்திவிடும். 1877-ம் ஆண்டு அவர் "மக்கள் உரிமை" என்ற அரிய சொற்பொழி வொன்றை நிகழ்த்தியுள்ளார்.

1884-85-ம் ஆண்டுகளில் இவர் "வைதீகம்" "எவ்வழி" "பொய்யும் அற்புதமும்" என்றும் தலைப்புகளில் பேசியுள் ளார். 1894-ஆம் ஆண்டு 'ஆபிரகாம் லிங்கன்' 'வால்டெயர்' "வேதபுத்தகம்" என்பவைகளைப் பற்றிய இவரது பேச்சுக் கள் நூலாக்கப்பட்டன. 1897-ஆம் ஆண்டில் "நான் ஏன் நம்பிக்கை யற்றவன்" "மனிதரை சீர்திருத்தும் விதம்" என் னும் பெரும் சொற் பொழிகள் உலகிற்குக் கிடைத்தன.

"உண்மை" "கடவுள்" என்ற இரு சொற்பொழிவு கள் இவருக்கு ஏராளமான விரோதிகளைத் தேடித்தந்தன. இவரை அறியாத அறிவிலிகள் "நாஸ்திக்" என்ற பெயர் சூட்டினர். படித்த முட்டாள்கள் இவருக்கு மறுப்பு நூல் எழுதினர். இவைகளைக் கண்டு அச்சமோ, ஆயாசமோ கொள்ளவில்லை. ஆணித்தரமான பதில்களை தந்து கொண்டே யிருந்தார்.

பின்னர் "மதம் என்றால் என்ன?" என்னும் பொருள் பற்றி 2—6—1899-ல் பாஸ்டன் நகரில் சொற்பொழி வாற் றினார். இந்தச் சொற் பொழிவை; போக்கிரிகள் முதல் "கிளாட்ஸ்டன்" (GLAD STONE) போன்ற அறிவாளி கள் வரை கேட்டனர். பின்னர் அனைவரும் இங்கர்சாலுக்கு எதிர் பிரச்சாரம் செய்தனர். "கிளாட்ஸ்டன்" ஒருதடவை பேசும்போது. மதவாதம் என்பது அதிக அடக்க ஒடுக்கத்

துடனும், மரியாதையும் நிம்மதியும் காட்டும் சுபாவத்துடனும் செய்யப்பட வேண்டுமென்றும், ஆனல் இங்கர்சால் பழக்கப்படாத ஒரு காட்டுக் குதிரையின் மேல் சவாரி செய்வது போதாதென்று, கடிவாளத்தின் கயிறுகளேயும் அதன் கழுத்திலேயே எறிந்து விடுகிருர்'' என்றும் எழுதினர்.

"கிளாட்ஸ்டன் மேற்சொல்லியபடி நான் செய்வதாக ஒப்புக் கொண்டாலும்கூட ஆழ்ந்த அமைதியும், நிம்மதியுமுடைய மனதுடன் ஓர் இறந்த குதிரையின் மீது பயபக்தியுடன் உட்கார்ந்திருப்பதைவிட நான் செய்வதாகச் சொல்லும் காரியம்; புதுப் புது உணர்ச்சிகளேயும், அதிகமான இன்பத்தையும், பந்தய ஓட்டத்தில் வெற்றி கிடைப்பதற்கு அதிகமான சந்தர்ப்பத்தையும் கொடுக்கக் கூடியதாய் இருக்கிறது'' என்று அழகான பதில் உரைத்தார்.

ஒரு தடவை பெண் ஒருத்தி தனக்கு எவரும் ஆதரவில்லே என்றும் உதவி தேவை என்றும் ஒரு பாதிரியிடம் முறையிட்டாள். அவள் மொழிகளே புறக்கணித்து அனுப்பிவிட்டான் அந்தத் பாதிரி. பின்னர் "இங்கே ஒரு நாஸ்திகன் இருக்கிருனே அவனே எல்லோரும் தூற்றுகின்றனரே. இருந்தாலும் போய்ப் பார்ப்போம்'' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு இங்கர்சாலிடம் சென்று திரும்பியதும் கீழ்வருமாறு அவள் சொல்லிக் கொண்டாள். "என்னுடைய இருதயம் துடி துடிக்க, என் மூளே கலக்கமுற, என்ன சொல்வது என்று தெரியாமல் தவிக்கும் நிலேமையில் நான் அவருடைய ஆபீஸ் அறைக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டேன். உடனே அவர் 'தயவு செய்து உட்காருங்கள். என்ன கஷ்டம் தங்களுக்கு ஏற்பட்டது?' என்று அன்பும், ஆதரவும் தோன்ற புன்முறுவல் பூத்த முகத்துடன் கேட்டார். என் குறைகளேக் கூறி, நிலேமையைத்தெரிவித்தேன். என்னே அக்கரையுடன் கண்காணித்து கேள்விகளேக் கேட்டார். பின்னர் எனக்குத் தேவைப்பட்ட பல புத்தி மதிகளே அன்புடன் கூறினர். நான் இன்பக் கண்ணீர் வடித்தேன். அவருடைய ஒவ்வொரு மொழியும் தேனேவிட இனித்தன. அப்போதே நான் பெரும் பணக்காரியாய் விட்டது போல் அறிந்தேன். நான் கேளாமலே தானகவே எனக்குப் பெருந் தொகை அளித்

தார்-வாசல் வரை வந்து வழிவிட்டார். 'அடிக்கடி வந்து உன் நிலைமையைத் தெரிவிக்க வேண்டும். போய் வாருங்கள். உங்களுக்கு வெற்றி உண்டாகுக' என்று கூறி அனுப்பினார். அது முதல் நான் ஒவ்வொரு நாளும் தூங்குவதற்கு முன்பும், இன்னும் பல ஆயிரக்கணக்கான தடவைகளிலும் கடவுள் இங்கர்சாலுக்கு அருள் புரிவாராக என்று பிரார்த்திக்கின்றேன்.''

* * *

அந்த நாட்டில் நீக்ரோக்களை, தீண்டப்படாதவர்களைக் காட்டிலும் கொடுமையாக நடத்தி வந்தனர். ஆனால் இங்கர்சால் அந்தக் கறுப்பு மனிதர்களை சமமாகப் பாவித்து அவர்களுக்கு வேண்டிய உதவிகளையும் செய்து வந்தார். ஒரு சமயம் மத விரோதியான இங்கர்சாலிடம் சில கிருத்துவ நீக்ரோக்கள் வந்து "கிருத்துவக் கோயிலின் மேற்கூரை ஒன்று காற்றில் விழுந்து விட்டது. அதைத் திரும்பவும் போடுவதற்காகப் பணம் தேவை என்று கேட்டனர் இங்கர்சால் அவர்கள் கேட்ட பணத்தைக்கொடுத்துவிட்டு'' கடவுளுக்கு மேற்கூரை தேவையில்லை போலும். அப்படியில்லாவிட்டால், சர்வ வல்லமை நிறைந்த கடவுள் பழைய கூரையை ஏன் பறக்க விடுகிறார். அய்யோ! இன்னும் புத்திசாலிகளான அந்த நீக்ரோக்கள் அடிமைத் தனத்திற்கு ஆதரவளிக்கும் ஒரு புத்தகத்தை (Bible) எப்படி விரும்புகின்றனர் என்பது எனக்குப் புரியவில்லை'' என்றார்.

இங்கர்சால் ஏழையாய் யில்லை. பெரும் பணம் சம்பாதித்து வாழ்ந்தார். அவருக்கு ஆண்டொன்றுக்கு 20,000 பவுண்கள் கிடைத்தன. அதில் நான்கில் ஒரு பங்கு நன்கொடையாக—அன்பளிப்பாக, நல்லவருக்கும், நல்ல காரியங்களுக்கும் செலவிட்டார்.

நாகரீக உலகை, ஆராய்ந்து, மதக் கொள்கையை இருந்த இடம் தெரியாமல் ஒழிப்பது ஆகியவைகளே இங்கர்சால் வாழ்க்கையின் தனிப் பெரும் வேலை. அந்த வேலையை அவரினும் திறம்பட எவரும் செய்திருக்க முடியாது. மூடநம்பிக்கை அவரின் அறிவுப் பொறிப்பட்டு எரிந்து சாம்பலாகியது. நரகம், அதன் கொடுமைகள் இவைகள் அவரை ஒன்றும் செய்ய முடியாமல் திகைத்தன. ஏன் கடவுள்கூட இவரைக் கண்டு அஞ்சினார். அவர் ஒரு சமயம்'' கடவுளை

நேசிப்பதைவிட, மனிதனுக்கு, மனைவியைக் காதலித்தல் மிக முக்கியம்'' என்றார். இதைக் கேட்ட வைதீகர்கள் வயிறு எரிந்தனர்.

இங்கர்சாலுக்கு குடும்பத்தின் மீது அதிக விருப்பம்; எல்லோரும் இன்பமாக வாழும் குடும்பத்தின் மீது அவருக்கு அளவு கடந்த ஆசை. அன்பு எப்போதும் அவரிடம் ஆறுபோல் பாய்ந்து ஓடும். அவர் தன் பேரன்—பேத்திகள், பாட்டன் முதலிய சந்ததிகளுடன் இறக்கும் வரையில் ஒரே குடும்பமாய் இன்ப வாழ்வு நடத்தினர்.

நம்பிக்கை என்பது மத நம்பிக்கை யல்ல—உண்மையில் நம்பிக்கை, மனித சுபாவத்தில் நம்பிக்கை என்பது அவருடைய அசைக்க முடியாத கருத்து. வறுமை, கொடிய குற்றங்கள், துன்பங்கள் இவைகளை எல்லாம் சீக்கிரம் ஒழித்து விடலாம். ஆனல் அடிமைத் தனத்திலிருந்து மனிதன் விடுதலை அடைவது கடினம் என்றார்.

தன்னுடைய வாழ்க்கையின் இறுதி பதினைந்து ஆண்டுகளை நியூயார்க் பட்டணத்தில் கழித்தார்.

நாஸ்திகன். மத விரோதி என்று பலரால் தூற்றப்பட்டாலும், இன்ப வாழ்வை வாழ்ந்து காட்டி, 'உலகமே இந்த வழியினை நீயும் பின்பற்று' என்று கூறிய நல்ல மனிதர், இங்கர்சால். 21-6-1899 ஆம் ஆண்டு மரண வேதனை அடையாமல், நோயின் பிடியில் சிக்காமல் அமைதியாக உயிர் நீத்தார்.

இங்கர்சால் இறந்தவுடன் மரணச் சடங்குகள் நடத்த பாதிரிமார்கள் வரவில்லை? சடங்குகளே நடைபெறவில்லை. இங்கர்சால் புத்தகங்களிலிருந்து சில வார்த்தைகளை அவரின் நண்பர்கள் படித்தனர். இங்கர்சால் இறந்த செய்தியைக் கேட்டு அமெரிக்கா முழுவதும் அழுதது.

1911-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அவருடைய உருவச் சிலை "பீயோரியா'' என்னும் ஊரில் திறக்கப்பட்டது. உலகம் இன்று அந்த அறிவுப் பொக்கிஷத்தை—உலக முன்னேற்றப் பாதையின் முன்னோடியை—ஏழைகளின் நண்பனை—அடிமைகளை ஒழிக்க பாடுபட்ட அந்த அறிஞனை—இங்கர்சாலை எப்படி மறந்துவிட முடியும்?

---

# மக்கள் உரிமை



அறியாமையைக் காட்டிலும் இழிவான அடிமைத்தனம் வேறு கிடையாது. அறிவுத்தாய் பெற்றெடுத்த அருங் குழவியின் பெயர் சுதந்திரம், உரிமை, விடுதலை என்றெல்லாம் கூறலாம்.

மக்கள் வரலாறு என்றால் என்ன?

அடிமைத் தனத்திலே மூழ்கி, மிருகத்தனங்களைக் கையாண்டு—அநீதிக் குட்பட்டு—பின்னர் அவைகளோடு போராடிப் போராடி, மெள்ள மெள்ள, சொல்ல முடியாத இன்னல்களுக்குள்ளாகி, சிறுகச் சிறுக முன்னேறுகிறான். இது மனிதன் வரலாறு.

மனிதன்—மன்னர்கள், புரோகிதர்கள் என்னும் இவர்களுடைய விளையாட்டுப் பொருளாகவும், ஏன்—சில சமயங்களில் அவர்களுக்கு இரையாகவும் இருந்திருக்கிறான்.

மூட நம்பிக்கை, மனிதனைத் தன் கொடுமை நிறைந்த பலாத்காரச் சக்திக் கிரையாக்கி யிருக்கிறது. பலாத்காரம் என்னும் இந்த சக்தியானது, மணிமுடி தரித்துக்கொண்டு, பயங்காட்டி அறியாமையை ஆண்டு வந்திருக்கிறது. கொடுங்கோல் ஆட்சி, நய வஞ்சகம் என்னும் இரண்டு பயங்கரப் பறவைகள் மனிதனின் உரிமைகளைக் கொத்தித் தின்று வந்திருக்கின்றன.

இதிலிருந்து தப்ப ஒரே வழிதான் இருந்தது; இப்போதும் இருக்கிறது. அதைத்தான் அறிவு வளர்ச்சி என்று நான் கூறுகிறேன். மனிதன் உழைக்கிறான். அவனின் சக்தியின் மீது கொடுங்கோல் ஆதிக்கம் ஏறிக் கொண்டது. மனித அறிவை மூட நம்பிக்கை என்னும்

கண்ணுக்குத் தெரியாத சங்கிலியால் பிணைத்து விட்டனர்.

மக்கள் உரிமையைத் தடுக்கும் துரோகிகள் மனிதன் சுய அறிவோடு வாழாமல் தடுக்க செய்யவேண்டியவைகளெல்லாம் செய்துவிட்டனர். ஆம்! அவர்கள் கையாளாத தந்திரங்கள் இல்லை. அவர்கள் செய்யாத கொடுமைகளைக் காண முடியாது அவர்கள் புரியாத அநியாயங்களும் நாம் பார்க்க முடியாது.

இந்தப் பெரிய போரில் அட்டூழியங்களைச் செய்தவர்களே பரிசு பெற்று மகிழ்ந்திருக்கின்றனர். நன்மைகளைச் செய்த நல்லவர்கள் பெரும் தண்டனைகள் அடைந்திருக்கின்றனர். படிப்பது பாதகம், எழுதுவது தவறு; சிந்திப்பது குற்றம்; ஆராய்ச்சி நடத்துவது அடாத செயல் என்றுதான் கருதப்பட்டு வந்திருக்கின்றன. விஞ்ஞானிகள் அரும்பாடு பட்டுச் செய்த ஆராய்ச்சிகள் தீண்டப்படாத பொருளாகவே இருந்து வந்திருக்கிறது.

மக்கள் உரிமையை ஒடுக்க—தடுத்து நிறுத்த—தொண்டாற்றாத அரியாசனங்களே இல்லை. தேவன் வாசம் செய்யும திருக்கோயில்களும் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கின்றன. மக்கள் தங்களின் முன்னேற்றத்திற்காக—நன்மைக்காக—எதையும் செய்யக் கூடாது என்று கூறுகிறான் அரசன். இதைக் கேட்டுப் பூரித்துப் போகிறான் புரோகிதன். அரசன் கைகளுக்கு விலங்குப் போடுகிறான்; புரோகிதன் அறிவுக்கு விலங்கு போடுகிறான். இந்த இருவரின் கேவலமான ஆளுகைக்கு உட்பட்டு மனிதனின் அறிவெனும் கழுகு, நயவஞ்சகம் என்னும் பாம்பாக மாறிவிட்டது.

மக்கள் சமுதாயமே சிறையில் அகப்பட்டுத் தவிக்கிறது. ஆம் அந்தச் சிறைக் கம்பகளின் வழியாக ஒளிக் கற்றைகளும் சிற்சில நேரங்களில் தோன்றுதுண்டு. விஞ்ஞான அணங்கு வெளுத்துப் போன, ஆனல் சிந்த-

தணைக் கிரல்கள் நிறம்பிய தன் திருமுகத்தை அந்தச் சிறைக் கம்பிகளின் அருகில் பொருந்திக்கொண்டு மக்கள் முன்னேற்றம் என்னும் விடி வெள்ளியை எதிர் பார்த்த வண்ணம் ஏங்கி நிற்கிருள். அவள் எண்ணம் வீண் போகவில்லை. சிறைக் கம்பிகள் உடைகின்ற சத்தம் கேட்டு மகிழ்கின்ருள். ஒரு சில அறிஞர்கள் அந்தச் சிறைச்சாலைகளினின்றும் தப்பி வெளி வந்து தன் இனத்தவர்களின் விடுதலைக்காக உயிர்போகும் அளவும் உழைத்திருக்கிருர்கள்.

சில ஆண்டுகட்கு முன், மக்கள் சமுதாயத்தின் மத்தியில் ஒரு விழிப் புணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அந்த உணர்ச்சி "ஒரு முடி சூடிய கொள்ளைக்காரன், தான் வாழ எங்கள் உழைப்பினை உறிஞ்சும் அதிகாரம் எவ்விதம் பெற்ருன்?" என்று கேட்கச் செய்தது. ஆனுல் அந்தக் கேள்வியைக் கேட்டவன் "துரோகி" என்று அழைக்கப்பட்டான். விழிப் புணர்ச்சி காரணமாக வேறு சிலர் "ஆடம்பர உடை அணிந்த வஞ்சகர்கள் எங்கள் சிந்தனை பலத்தின் மேல் ஆட்சி நடத்த எப்படி முடிந்தது" என்று கேட்டனர். அவர்கள் "மதத்தை நம்பாதவர்கள்" என்று தூற்றப்பட்டனர். "இப்படியே மனிதன் கேள்விகளைக் கேட்டுக் கொண்டே போவானுகில் முடிவு எங்கே போய் முடி முடியும்" என்று அரசனும், புரோகிதனும் ஒன்று சேர்ந்து ஒலியெழுப்புகின்றனர். மனிதன் சுதந்திரமாக- உரிமையாக இருப்பது ஆபத்து என்று எப்போதும் கூறிக் கொண்டே யிருக்கின்றனர் ஆனுல் இதை நான் பலமாகக் கண்டிக்கிறேன். அறிவு என்பது ஒரு பரந்த கடல்; அதில் எல்லாவிதமான கப்பல்களும் செல்லலாம். அந்த அளவுக்கு இடமிருக்கிறது, கடலிலே! அறிவாகாயத்தில் எந்தவிதமான இறக்கைகளோடு கூடிய பறவைகளும் பறக்கலாம். இதைத் தடுப்பவர் எவரும் இல்லை!

தானுகவே சிந்திக்கத் தெரியாத மனிதன் அடிமை. அந்த அடிமை தனக்கு மட்டும் துரோகம் செய்து

கொள்வதோடு நின்றுவிடாமல் தன் இனத்தவர்களுக்கும் பெருந் துரோகம் செய்து வருகின்முன் ஒவ்வொரு மனிதனும் நீல நிற விண்ணின் கீழே, கண் சிமிட்டும் ஆயிரக்கணக்கான விண்மீன்களின் கீழே, தன்னைப் போன்ற ஒரு மனிதனுக்குச் சமதையுள்ளவனுகத் தலை தூக்கி நிற்க வேண்டும்.

ஆண்டவனை அளந்து காண முடியாது. அத்தகு அளந்து காண முடியாத இறைவன் முன்னிலையில் நிற்கும் எல்லோருக்கும் சிந்திக்கும் உரிமை உண்டு. பிறப்பு—இறப்பு—என்னும் பெரிய பிரச்னைகளை அறிய ஆவல் கொள்ளும்போது எல்லோரும் ஒரேமாதிரியான அக்கரைதான் கொள்கிருர்கள்.

மனிதன் எண்ணவேண்டும். இதைத்தான் நான் உங்களிடம் எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன். எண்ணி விட்டால் மட்டும் போதாது. எண்ணியதை எடுத்து இயம்பும் உரிமையும் இருக்கவேண்டும் என்பதே என் விருப்பம். நான் உங்களிடம் கூறுவதெல்லாம் சரியானது என்ரே—உண்மை என்ரே சாதிக்கவில்லை. நான், உண்மை என்று எதைக்கருதினேனே அதை உங்களிடம் கூறுகின்றேனே ஒழிய உண்மையின் எல்லா பாகங்களையும் கண்டுவிட்டதாக நான் பாசாங்கு செய்யவில்லை.

சிந்தனையின் சிகரத்தில் ஏறி நின்று கொண்டிருக்கிறேன் என்ரே, ஆராய்ச்சியின் அடிபாதாளத்தைக் கண்டு விட்டேன் என்ரே சாதிக்கவில்லை. என்மனதில் தோன்றும் எண்ணங்களைச் சொல்லால் படமாக்கிக் காட்டுகிறேன். இதைப் போலவே மக்கள் மனதில் பட்டதை எடுத்தியம்ப உரிமை இருக்கவேண்டும் என்பது என் வற்புறுத்தலாகும். இந்த உரிமையை எவனேனும் மறுத்தால்—தவறு என்று கூறினுல்—அவனை நான் ஒரு அறிவு நிறைந்த கள்ளன்—கொள்ளைக்காரன் என்று சற்றும் தயங்காமல் கூறிவிடுவேன்.

உயிரைச்சுற்றிப் பிணைக்கப்பட்டிருக்கும் அடிமைச் சங்கிலிகளை அகற்றுங்கள். உடைத்துத் தள்ளுங்கள். சிந்திக்கும் உரிமை, இயற்கையாக எண்ணும் உரிமை எனக்கு இல்லையானல், எனக்கு மூளை யிருப்பானேன்? எனக்கு சிந்திக்கும் உரிமை கிடையாது என்றால், மூன்று அல்லது நான்கு பேர் கூடி, ஏதோ ஒரு மதக் கோட்பாட்டில் கையொப்பமிட்டு விட்டு, ஒரு வீட்டைக் கட்டி, அதன்மீது ஒரு கோபுரத்தையும் நிறுத்தி வைத்து, அத்துடன் மணியொன்றையும் அதில் மாட்டி வைக்கிறார்களே அவர்களுக்கு மட்டும் சிந்தனை செய்யும் உரிமை உண்டா?

இவ்வுலகில் தோன்றிய நல்லவர்கள்—தாம் சிந்தித்தால்—எண்ண உலகில் சஞ்சரித்தால்—சவுக்கடி தரப்படுவதை—பலாத்காரத்தை உபயோகிப்பதைக் கண்டு சலித்து விட்டனர். அவர்கள் தங்கள் சிந்தனையில் உதித்தவைகளை மக்களிடம் சொல்வதற்கு முன் அவர்களின் கண் முன் இருப்புச் சங்கிலியும்—அந்தப் பயங்கரமான தொழுக் கட்டையும் தான் தோன்றுகிறது. உடனே அவர்கள் உடல் நடுங்குகின்றது.

அறிவாளிகள்—சுயமாக நினைப்பவர்கள் சுதந்திரமாகத்தான் இருக்கிறார்கள். தான் மட்டும் சுதந்திரமாய் இருப்பதை அவர்கள் விரும்ப மாட்டார்கள். மற்றவர்களும் தன்னைப்போல் உரிமை உடையவர்களாய்—விடுதலை வீரர்களாய் வாழ வேண்டும் என்று கருதுகிறார்கள். அதனால் அவர்கள் பெற்ற சுதந்திரத்தை மற்றவர்களுக்கும் மனமுவந்து அளிக்கிறார்கள். ஒருவன் பெற்ற சுதந்திரத்தை மற்றவர்களுக்கு அளிக்க மறுப்பவன் அயோக்கியன். அது மாத்திர மல்ல களங்க முள்ளவனும் கூட.

நம் முன்னோர்கள் அவரவர் வசதிக் கேற்றபடி, அவர்களின் நலத்திற்காக மக்களை நம்புமாறு செய்ய முடியும் என்று நினைத்தார்கள். பலாத்காரம் என்னும் ஆயுதத்தைப் பிரயோகித்தால் அதற்குமுன் எவரும்

எதிர்த்து நிற்க முடியாது என்றும் நினைத்தார்கள், நம்மவர்கள். மூளையில் முளைத்தெழுந்த ஒரு முடிவை —அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து கண்ட உண்மையை — பிறரின் கட்டாயத்தால் மாற்றி விடவா முடியும்? ஜாதிப் பிரஷ்டம் என்ற தண்டனையா, அவன் அசைக்க முடியாத முடிவை ஒழித்து விடும்? இந்த விதமான தண்டனைகள் அள்ளி வீசுவதாலும், அடக்குமுறைகளைக் கையாள்வதாலும், நாடு கடத்துவதாலும் உங்களால் என்ன சாதிக்க முடியும் என்று கருதுகிறீர்கள்? இதுவரையில் எதைத்தான் சாதித்திருக்கிறீர்கள்? இதை விளக்கிக் காட்டுகிறேன்.

நீங்கள் இலட்சக் கணக்கான மக்களை நயவஞ்சகர்கள் என்ற பெயரால் அழைக்கலாம். ஒரு புதுக் கருத்தை நாட்டிற்கு எடுத்துக் கூறியவனை உன் மனதை மாற்றிக் கொள் என்று கூறி தண்டனைக்குட்படுத்தி, "என் மனதை நான் மாற்றிக் கொண்டேன்" என்று கூறுமாறு செய்யலாம். ஆனால் அவன் மனம் சிந்தித்து—உள்ளம் ஆராய்ந்து தந்த ஒரு முடிவை மாற்றிக் கொள்ளவே மாட்டான். இஃது உண்மை. அவனின் உள்ளத்தை மாற்ற எந்த சக்தியாலும் முடியாது

அவனை நீங்கள் இரும்புச்சங்கிலியால் பிணைக்கலாம்; அவன் கால்களில் இரும்பு பூட்ஸ்களை நீங்கள் இரக்கத்தை ஒழித்துவிட்டு மாட்டலாம்; உடலைச் சித்ரவதை செய்யும் யந்திரம் ஒன்றை வைத்திருக்கின்றீர்களே அதில் அவனைக் கடைசி மூச்சு இருக்கும் வரையில் படுக்கவைக்கலாம்; இன்னும் இதைவிட கொடூரமாக நெருப்பிலிட்டு எரிக்கலாம், ஆனால் அவன் வேதனை அடைந்திருப்பானே ஒழிய மனம் மாறியிருக்கமாட்டேன், மனம் என்ன? அவன் சாம்பல் கூட அவன் கருதனதையுடையதாகவே யிருக்கும் என்பதை மறந்து விடாதீர்கள்.

பண்டைக் காலத்தில் வாழ்ந்தவர்கள்—நமது பாட்டன்மார்கள்—அவர்களைப் பற்றிய நல்ல அபிப்பிராயத்தை எப்படி நான் சொல்ல முடியும்? அவர்கள் இப்போது இல்லை, இறந்து விட்டார்கள் என்றுதான் கூற முடியும். அவர்கள் ஒரு மனிதனைக் கட்டாயப் படுத்தி பலாத்காரத்தைப் பிரயோகித்து, தங்கள் விருப்பப்படி ஆட்டிப் படைக்கலாம் என்று கருதினார்கள். அந்த எண்ணம் உலகின் சில பாகங்களில், ஏன் நாம் வாழும் அமெரிக்காவில் கூட கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கிறது. தன் மனதில் பட்டதை எடுத்து கூறினால் போதும் "அந்த மனிதனோடு வியாபாரம் செய்ய மாட்டோம். தேர்தலில் நின்றால் ஓட்டுச் செய்ய மாட்டோம்—எங்கள் வழக்கிற்கு அவனை வழக்கறிஞனாக அமர்த்த மாட்டோம்—வைத்தியனானால் அவனிடம் மருந்து அருந்தி உயிர் வாழ்வதைக் காட்டிலும் மருந்தே உண்ணாமல் இறந்து விடுவோம்-விருந்தில் அவனைக் கலந்துகொள்ள அழைக்க மாட்டோம்-ஜாதிப் பிரட்டம் செய்வோம்" என்று கூறவில்லையா? அவன் கடை தேற வழியே இல்லையா என்றால் "ஏன் இல்லாமல்? எங்களுடன் அவன் கோயிலுக்கு வரவேண்டும். எங்கள் மதத்தைக்கண்ணைமூடிக் கொண்டு ஏற்றுக் கொள்ள வேண்டும்-நாங்கள் கூறும் கடவுளையே வணங்க வேண்டும்—அப்படிச் செய்தால்தான் நாங்கள் எல்லாவித உதவிகளையும் செய்வோம் — இல்லையேல் அவன் ஒழிந்தான்" என்று இன்று கூட நமது வைதிகர்கள் தைரியமாகக் கூறுகிறார்கள்.

நான் முன்னர் கூறிய பண்டைக் காலத்தவர் நினைத்தவை யாதெனில், எல்லோரும் ஒரே மாதிரியான சிந்தனை யாளராக இருக்கவேண்டும்; ஒன்றையே நினைக்கவேண்டும்; எல்லோரும் ஒன்றையே எண்ணவேண்டும் என்று கருதினார்கள்.

இன்று உலகில் இயந்திர வளர்ச்சி பெருகி பல விதங்களில் முன்னேறிக் கொண்டு வருகிறது. இரும்

பினும் இரண்டு கடிகாரங்கள் ஒரே மாதிரி ஓடுவதில்லை. அப்படியிருக்க அறிவிலும், அனுபவத்திலும், கல்வியிலும் ஆசையிலும், நிலைமையிலும் சுற்றுச் சார்பாலும் வெவ்வேறுயுள்ள பலரும் எப்படி ஒரே மாதிரியாக எண்ணமுடியும? பற்றுப் பாசங்கள் பலவகை கொண்டுள்ள இனத்தவர் ஒரே சிந்தையாளராய் இருக்கவேண்டும் என்று எப்படி வற்புறுத்த முடியும்?

முடிவில்லாத ஒரு முதல்வன் இருப்பது உண்மையானல், மக்கள் அனைவரும் ஒரே மாதிரியான எண்ணம் உடையவராய் இருக்கவேண்டும் என்று அவர் கருதுவாராளுல், ஏன் அவர் ஒருவனுக்கு குறைந்த அறிவும்—மற்றொருவனுக்கு அதிகமான அறிவும் கொடுத்தார்? அனைவரும் ஒரே மாதிரியாயிருக்க வேண்டும் — ஒரே மாதிரியாக எண்ண வேண்டும்-ஒரே மாதிரியாக உணர வேண்டும் என்பது அவரின் நோக்கமானல் அறிவு வித்தியாசங்கள் ஏன் ஏற்படுகிறது?

நமது முன்னோர்கள் மக்கள் குலத்தைக் கொடுமை படுத்தினர்கள் என்பதை நூல்களில் நான் படித்திருக்கிறேன். ஆனல் நான் அந்தப் புத்தகங்களைப் பாராட்டவில்லை. அந்த நூல்கள் என் அறிவுக்கு ஒளி தரவில்லை. ஆம்! மதத்தின் பெயரால் பல அட்டூழியங்கள் நடைபெற்றிருக்கின்றன. என்னல் அவைகளைப் பாராட்ட முடியவில்லை.

இரண்டு இரும்புத் துண்டுகள்! அவை நழுவாத வண்ணம் உள் பக்கம் குத்தூசிகள் அந்த இரு இரும்புத் துண்டுகளும் ஒரு முறுக்காணியால் இணைக்கப்பட்டிருக்கும் இதற்குப் பெயர் 'கட்டைவிரல் முறுக்காணி' என்பது. இது எதற்குப் பயன் படுகிறது தெரியுமா?

'ஞானஸ்தானத்தால் பயனில்லை' என்றாலும், அல்லது 'ஒருவன் தண்ணீரில் மூழ்காமல் காப்பாற்றப்பட ஒரு மீன் அவனை விழுங்கி விட்டது என்னும் பித்தலாட்டச் சொல்லை நான் நம்பமாட்டான்" என்றாலும் அவ

னுடைய கட்டைவிரல்கள் முன்னர் குறிப்பிட்ட இரண்டு இரும்புத் துண்டுகளில் வைக்கப்படும். அன் பின் பெயராலும், எல்லா உயிர்களின் இரக்கத்தின் பெயராலும், அந்த முறுக்காணியைத் திருகிவிடுவர், உடனே வேதனையால் வாடித் தவிக்கும் அவர்கள் "ஐயோ! என்னை விட்டு விடுங்கள் நான் சொன்னது தவறு என்று ஒப்புக்கொள்வார்கள். பெரும்பாலோர் அப்படித்தான். அவர்கள் மாத்திரம் என்ன நான் கூடத் தான் அப்படி கூறியிருப்பேன். ஆம்! ஐயா நீங்கள் என்னை எப்படிச் சொல்லச் சொல்லுகிறீர்கள்? ஒரு கடவுள் என்று சொல்லட்டுமா? அல்லது இலட்சக் கணக்கானக் கடவுள் என்று கூறட்டுமா? ஒரே நரகமா அல்லது கோடிக்கணக்கான நரகங்களா? எப்படிச் சொல்லச் சொன்னாலும் சொல்லிவிடுகிறேன். தயவு செய்து மேலும் என்னை இம்சை செய்யாதீர்கள் நிறுத் துங்கள்" என்று கூறியிருப்பேன்.

பெரும் பாலோரும் இப்படிச் சொல்லி தங்கள் கருத்தி லிருந்து பின் வாங்கினாலும், "ஒரு மயிரிழைக் கூட எங்கள் கருத்துக்களை மாற்றிக்கொள்ள மாட் டோம். நீ எங்களை என்ன வேண்டுமானாலும் செய் கொளுத்து! சித்ரவதை செய்! நாங்கள் அஞ்சப்போவ தில்லை. என் உயிரைத்தான் உன்னால் போக்கமுடியுமே ஒழிய என் தெளிவான முடிவை உன்னால் தொடக்கூட முடியாது" என்று கூறிய உத்தமர்களும் எத்தனையோ பேர் இருந்திருக்கின்றனர். இவர்கள் தங்கள் அறிவுப் பெருக்கத்தின் விளைவாகக் கண்ட உண்மைகளைக் காப் பாற்ற உயிரையும் தந்தவர்கள். இத்தகு பேராற்றலும், தளராத உறுதியும் — தன்நம்பிக்கையும் கொண்ட ஒழுக்க சிலர்கள் உதித்திரா விட்டால் நாம் இன்னும் காட்டுமிராண்டிகளாகவே வாழ்ந்து கொண்டிருப் போம். ஒவ்வொரு காலத்திலும இந்த அறிவாளர்கள் உதிக்கவில்லை என்றால் நாம் இன்னும் பச்சை மாமிசத் தைப் புசித்துக் கொண்டும், உடல் முழுவதும் காட்டு

மிருகங்களின் உருவங்களை பச்சை குத்திக்கொண்டும், படமெடுத்தாடும் பாம்புகளைக் கடவுள்களாகப் போற்றிக்கொண்டும் இருப்போம். அவைகளைச் சுற்றிச் சுற்றி நாட்டிய மாடிக் கொண்டு தானிருப்போம் ஆகையால் எதிர்ப்பைக் கண்டு அஞ்சாது—துவேஷத்தைத் தூள் தூளாக்கி—மரண பயம் அற்று—தாங்கள் கண்ட உண்மைகளை எவருக்கும் அஞ்சாமல் தலை நிமிர்ந்து கூறியவர்களுக்கு நாம் வணக்கம் செலுத்த வேண்டும்.

இவர்களுக்குத்தான் வீரர்கள் என்ற பட்டம் சாலப் பொருந்தும். இவர்களுக்கு—இத்தகைய வீரப் பெருமக்களுக்கு நமது முன்னோர்கள் மதிப்புக்கொடுக்கவில்லை—மாறாக எதிர்த்தனர்—தான் கொண்ட கொள்கைகளை மாற்றிக்கொள்ள மறுத்த மாவீரன் மன்னிக்கப் படவில்லை—முன்னோர்கள் கட்டை விரல் முறுக்காணியின் கடைசி முறுக்குவரையில் திருகிவிட்டு மகிழ்ந்தனர். அப்படிச் செய்தும் தன் மனதை மாற்றிக்கொள்ள மறுத்தால், அவனை ஒரு இருட்டறை வரவேற்கும். அங்கு இருளும் மௌனமும் தான் அவன் நண்பர்கள். தவிப்பான்—தொல்லை படுவான்—அல்லலுறுவான். இவ்வளவு கொடுமைகளும் அவன் அனுபவிக்கவேண்டும்.

இந்த சகிக்க முடியாத கொடுமைகள் எதன் பெயரால் நடை பெறுகிறது தோழர்களே! சிந்தியுங்கள்! அன்பின் பெயரால்! தயை என்னும் தூய்மையான சொல்லின் பெயரால்! இரக்க வடிவினரான கருணை நிறைந்த கிருத்துவின் பெயரால்! கவனமிருக்கட்டும்!

இவ்வளவோடு நின்று விடவில்லை! வேறு ஒரு பயங்கர யந்திரம் உண்டு. இரும்பு வளையம் ஒன்றிருக்கும்; அதன் உள்பாகத்தில் மெல்லிய கூறான நூற்றுக்கணக்கான ஆணிகள் இருக்கும்; இதைக் கழுத்திலே மாட்டுவார்கள். இதன்பெயர், 'கழுத்துக் குத்து யந்திரம்' என்பது. இதை கழுத்தில் மாட்டிக்கொண்டே

ஒருவன் நடக்கவோ—உட்காரவோ—முயன்ருல் அந்த வளையத்தின் கூருன ஆணிகள் அவன் கழுத்தைக் குத்திக் குருதி பெருக்கச் செய்யும். சிறிது நேரத்திற்குள் கழுத்து வீங்கிவிடும். மூச்சுவிட முடியாமல் திணறுவான் ஓரிரு விஞடிகளில் தெப்பென்று நிலத்தில் சாய்வான். ஆம்—அவன் உயிர் அந்த உடலை அங்கே போட்டுவிட்டு ஓடிவிடும். இவன் என்ன அவ்வளவு பெரிய குற்றத்தைச் செய்துவிட்டான் என்று கேட்கிறீர்கள்? கேளுங்கள்! நமது பரம பிதாவாகிய கடவுள் மனிதர்களின் குழந்தைகளாகிய நம்மை, நிரந்தர நரகத்திற்கு உட்படுத்த மாட்டார்'' என்று, இரு கண்களிலும் பெருகிய நீர் கன்னங்களின் வழியே பாய்ந்தோடிய வண்ணம் சொல்லியிருப்பான். தோழர்களே! அதுதான் அவன் செய்த மன்னிக்க முடியாத பெருங் குற்றம்.

மற்றொரு விதமான கொடுமை நிறைந்த செயலையும் நான் கண்டிருக்கிறேன். கைபிடியோடு கூட்டிய கத்திரிக்கோல் போலயிருக்கும். அந்தக் கைப் பிடிகளுக்கு மேல் இரண்டு இறக்கைகள் இருக்கும் இவைகளின் கீழ்க் கைப் பிடிகள் சாதாரணமாய் இருக்கும். இறக்கைகளின் நுனிப் பாகங்களிலும் கைப்பிடி யிருக்கும். இரண்டு இறக்கைகளையும் இணைக்கின்ற சந்திப்பில், இரும்பு வளையம் ஒன்று சேர்க்கப்பட் டிருக்கும் மேலே யுள்ள இரண்டு கைப்பிடிகளில் இரண்டு கைகளையும் கட்டிவிடுவர். கீழே யுள்ள இரண்டு கைப்பிடிகளிலும் இரு கால்களைக் கட்டிவிடுவர், நடுவிலுள்ள இரும்பு வளையத்தில் தலையைக் கட்டாயப்படுத்தி நுழைக்கச் செய்வார்கள். இப்படியே சிறிது நேரம் ஒருவன் நின்ருல் அவனின் நரம்புகள் வலிக்கும்—அதனுல் அவன் பித்தனுவான். ஆம் தோழர்களே! அறிவாளியைப் பித்தனுக்கும் அபாய ஆயுதம் அது!

இந்த ஆயுதத்திற்கும் "தோட்டியின் மகன்'' என்ற பெயர் வைத்திருக்கின்றனர். இந்த யந்திரத்தில் சிக்கியவன் பைத்தியக்காரனுகவே இறந்து ஒழிவான். அவன்

இறந்த பிறகுதான் அவன் தொல்லைகள் ஒழியும். இந்தப் புண்ணிய காரியம் செய்வது யார் என்று கேட்கிறீர்கள்? "உன்னை ஒரு கன்னத்தில் அடித்தால் அவனுக்கு மற்றொரு கன்னத்தையும் காட்டு" என்று கூறுகின்ற பெரிய மனிதர்களே இந்தக் காரியத்தைச் செய்து வருகின்றனர்.

இவ்வளவோடு நின்றுவிடவில்லை வேறு ஒரு வேதனை தரும் யந்திரம் உண்டு! அது பரண் மாதிரியிருக்கும். அதற்கு சங்கிலிகள்போட்டு வைத்திருப்பார்கள். ஒவ்வொரு கோணத்திலும் முறுக்காணிகள் போட்டு முடுக்கி யிருப்பர், இந்த யந்திரம் எல்லோருக்கும் ஏற்றதல்ல. ஒரு சிலருக்குத்தான் அதுவும் கிருத்துவ தர்மத்தை ஏற்றுக் கொள்ளாத குற்றவாளியை அந்தப் பரண்மீது படுக்க வைப்பர்; அவன் உடம்பில் ஒவ்வொரு அங்கத்தையும் இரும்புச் சங்கிலியால் கட்டிவிட்டு முறுக்காணியைப் போட்டு முறுக்குவார்கள். அப்போது பாவம்! அந்தக் குற்றவாளியின் உடம்பிலுள்ள மூட்டுக்கு மூட்டு, தளர்ந்துவிடும் " அவன் வலி தாங்காமல் தத்தளிப்பான். பக்கத்தில் அவனைப்பார்த்த வண்ணம் நின்றுகொண் டிருப்பார் ஒரு வைத்தியர். ஏன் தெரியுமா? அவன் இறந்துவிடக் கூடாது. காப்பாற்றப்பட வேண்டும்-நாளைக்கும் இதே தண்டனையை அனுபவிக்க! இந்த மனதால் விளக்கவும் நடுங்கும் கொடுமைகள் கொலைக்காரர்கள் நிகழ்த்தவில்லை. அவர்கள் செய்திருந்தால், மன்னித்து விடுவோம் இவ்வளவும் நிகழ்ந்தது, நாகரிகத்தின் பெயரால்; சட்டத்தின் பெயரால்; ஒழுக்கத்தின் பெயரால்; கருணைக்கடலாம், கிருத்துவரின் பெயரால்; இதை மறந்துவிடக் கூடாது. நீங்கள் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

இந்தப் பயங்கரமான நிகழ்ச்சிகளைப் படிக்கிற போதும், எப்போதாவது எண்ணிக் கொண்டாலும், அந்தப் பெருந் துன்பங்களை நானே அனுபவிப்பது போன்ற உணர்ச்சியை அடைகிறேன். அப்போது என்

மனக்கண்களில் நான் நாடுகடத்த படுகிறேன். தேச பிரஷ்டமாகிய கரையின் மீது நின்றுகொண்டு கண்க ளிலே நீர் ததும்ப என் வீட்டையும் என்னைப் பெற்றத் தாய் நாட்டையும் பார்த்துக்கொண் டிருக்கிறேன். என் விரல்களிலிருந்த நகங்களைப் பிடிங்கிவிட்டு ரத்தம் வழியும் அந்த இடங்களில் கூர்மையான ஊசிகளைச் சொருகு கிறார்கள். மிகவும் கடினமான வேதனைத் தரும் பூட்ஸ் களில் என் கால்கள் பிணைக்கப் படுகின்றன. இருள் சூழ்ந்த அறையில் சங்கிலியால் என்னைக் கட்டிப் போட்டு விட்டனர். அப்போது என்னை விடுவிக்க எவரோ வருகிற காலடிச் சத்தம் கேட்கிறது. நான் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப் படுகிறேன் ஒளியுள்ள கொடுவாள் என் கழுத்தை துண்டிக்கிறது. வேதனைத் தரும் யந்திரங்களில் நான் படுத்திக்கொண் டிருக்கிறேன். அப்போது வஞ்சக வடிவினரான புரோ கிதர்களின் வெண்மையான முகங்கள் என்னைக்குனிந்து பார்க்கின்றன என் மனைவி என்னை விட்டு பிரிக்கப்படு கிறாள்—மக்களிடமிருந்து பிரிக்கப் படுகிறேன்—என் கரங்களில் கெட்டியான விலங்குகள் காட்சியளிக்கின் றன. மக்கள் கூடும் சதுக்கத்தில் கொண்டுவந்து நிறுத் தப்படுகிறேன். என்னைச் சுற்றிலும் கட்டைகள் அடுக் குகிறார்கள் உடனே தீ என் தேகத்தைத் தொடுகிறது. என் தேகத்தை எரிக்கிறது. கண்கள் குருடாகி விடுகின் றன. துவேஷம் தன் கணக்கற்றக் கைகளால் என் சாம் பலை எடுத்து நாற்புறமும் வீசி காற்றிலே பறந்து போகச் செய்கிறது. இவை யெல்லாம் என் மனக் கண் களில் தோன்றும் காட்சிகள். தோழர்களே! உடனே என் மனதில் ஒரு எண்ணம் உண்டாகிறது. அது என்ன வென்றால் நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே ஆண்—பெண்—குழந்தைகள் — இவர்களின் உரிமை யைக் காப்பாற்றவும்—வலுப்படுத்தவும் நாம் நம்மால் முடிந்ததைச் செய்தாக வேண்டும் என்ற உறுதிதான்!

என்பாலுள்ள நியாயபுத்தி—இரக்கம்—நேர்மை—அறிவு வளர்ச்சி இவைகளைக்கொண்டு ஆராய்ந்து பார்க்கின்றபோது, என் அறிவில் படும் கருத்துக்களை உங்கள் முன் வைக்கிறேன்.

"எனக்கு இந்த உரிமைகள் வேண்டும்" என்று கூறுகின்றவன், அதே உரிமைகளை, தன்னைப் போன்ற வேறு ஒரு மனிதன் விரும்பும்போது, அளிக்க மறுத்தால் அவன் இந்தப் பரந்த உலகில் எந்த பாகத்தில் இருந்தாலும், அவன் எவ்வளவு உயர்ந்தவன் என்று கூறினாலும் - அவன் காட்டு மிராண்டியின் நிலைக்குச் சமீபத்தில் வசித்தவன் என்று நான் கூறுவேன். இது தான் சரி என்று நான் கருதுகிறேன். எவன் ஒருவன், தான் எல்லா உரிமைகளையும் அனுபவிக்க தகுதியுள்ளவன். அதாவது, எதையும் எண்ண நான் உரிமையுடையவன்; நான் எழுதும் எழுத்துக்கள்தான் நாட்டில் நடமாடவேண்டும்; என் பேச்சைத்தான் எல்லோரும் கேட்டாகவேண்டும், என்று கூறிக்கொண்டு, மற்றவர்களைப் பார்த்து "சிந்திக்காதே! உனக்கு அந்த உரிமை யில்லை. எழுதாதே அந்த உரிமை உனக்கு எப்படி கிடைத்தது? பேசாதே! நான் பேசுவதைக் கேள்," என்று கூறுபவன் அயோக்கியன் - அதுமட்டுமல்ல சுயநலப் பேயன் - மிருகத் தன்மையுள்ளவன் என்பதில் எவரும் சந்தேகம் கொள்ள வேண்டாம்.

இஃது அறிவின் வளர்ச்சியைப் பொறுத்த விஷயமாகும் தன் நேர்மையான எண்ணத்திற்கு மற்றொருவனை எவனொருவன் பொறுப்பாளியாக்குகிறானோ அவனுடைய மூளை சீர்கெட்டுப் போயிருக்கும். அல்லது குழம்பிவிட் டிருக்கும் என்பதுதான் உண்மை! இதற்குக் காரணம். அறிவு வளர்ச்சித்தான் என்பதை மீண்டும் நினைவூட்டுகிறேன்.

கொஞ்ச நாட்களுக்குமுன் நான் சில காட்சிகளைக் கண்டேன். அவை அனைத்தும் மனிதனால் ஆக்கப்பட்டவை, மனிதன் தோன்றியது முதல் இன்றுவரை எங்

தெந்தப் பொருள்களைச் செய்திருக்கிறனே அவைகளை யெல்லாம் பார்வை யிட்டேன், தண்ணீரில் மிதந்துச் செல்லும் யெல்லாக் கருவிகளையும் கண்டேன். உடலை உடை கொண்டு மறைக்கத் தெரியாத மனிதன்; ஆம் நிர்வாணமான நிலையில் இருந்தவர்களை நான் கண்டேன். அவர்கள் யாரோ அல்ல, நம்முடைய முன்னோர்கள். அவர்களின் அங்க அடையாளங்களையும் வர்ணிக்கிறேன் கவனமாய் கேளுங்கள், பற்கள் இரண்டு அங்குலம் நீண்டிருக்கும்; தலைக்குப் பின்புறம் சிறிதளவு மூளை இருக்கும்; காண அழகற்றவர்கள். ஆம் அவர்களை நாம் இன்று கூறுகிறோம் காட்டுமிராண்டிகள் என்று அவர்களால் செய்யப்பட்டு தண்ணீரில் தள்ளிச் செல்லப்பட்ட சிறு தெப்பம் கண்டேன். அதே கண்களால், நூறு பீரங்கிகள் தாங்கி; நீரைக கிழித்துச் செல்லும் போர்க் கப்பலையும் கண்டேன்; ஆம் தோழர்களே! காட்டுமிராண்டியின் காலத்து சிறு தெப்பம் முதல் தன் மனசாட்சி என்னும் திசையறி கருவியின் துணையால் நியூயார்க் துறைமுகத்தினின்றும் புறப்பட்டு மூவாயிரம், நாலாயிரம் மைல் தூரம் செல்லும் பெரிய கப்பல் வரைப் பார்த்தேன்.

ஆதிகால காட்டுமிராண்டி என்னும் பெயர் பெற்ற அந்தக் காலத்து மனிதன், தான் வசித்துவந்த சின்னஞ் சிறு குடிசையிலிருந்து மெள்ள மெள்ள தவழ்ந்து கொண்டுபோய் தன் பசியை ஆற்றிக்கொள்ள ஒரு பாம்பை அடித்தானே தடியால்; அந்தத் தடியைப் பார்த்தேன். அதே கண்களால் இரண்டாயிரம் பவுண்ட் நிறையுள்ள குண்டுகளை வீசி யெறியக்கூடிய பயங்கர ஆயுதமாகிய பீரங்கியைப் பார்த்தேன்.

ஆதி மனிதர்தள் போர் புரியும் போது எதிரியின் ஆயுதங்கள் தங்கள் மார்பில் பாயாதிருக்க வேண்டி கவசமாக அணிந்திருந்தார்களே ஆமை ஓடு, அதைப் பார்த்தேன்; அதே நேரத்தில் இரும்பாலும் எஃகாலும்

செய்யப்பட்ட உறுதியான போர்க் கவசங்களையும் கண்டேன்.

பண்டைக் காலத்து மக்கள் ஓய்வு நேரங்களில்—யுத்த காலங்களில் உபயோகித்தார்களே தம் பட்டம் போன்ற கருவிகள், அவைகளைப் பார்த்தேன். அதே நேரத்தில் இனிமை தரும் தற்காலத்து இசைக் கருவிகள் அனைத்தும் பார்த்தேன். நமது மூதாதையர்கள் மஞ்சள் மண்ணின்மீது எழுதி வைத்துச் சென்ற ஓவியங்களைக் கண்டதுடன், இன்று வெளிவந்துள்ள சித்திரங்களையும் சிற்ப வகைகளையும் காண நேரிட்டது.

அந்தக் காட்டு மிராண்டிகளின் எழுத்துக்களை மிருகங்களின் தோலின்மீதும், இலைகளின் மேலும், மரப் பட்டைகளின் மேலும் கண்டேன், அத்துடன் இன்று நூல் நிலயங்களை அழகு படுத்தும் உயர்ந்த புத்தகங்களையும் பார்த்தேன். புத்தகங்கள்—நூல் நிலயங்கள்—இவைகளைப் பற்றி பேசும் இந்த நல்ல நேரத்தில் என் மனக்கண் முன் கிரேக்க நாட்டின் பேரறிஞன் பிளோட்டோவின் அறிவுரை ஒன்று தோன்றி என்னை மகிழ்விக்கிறது. "எந்த வீட்டில் நூல் நிலயம் இருக்கிறதோ அந்த வீட்டில்தான் உயிர் ஒளி (ஆத்மா) இருக்கிறது" என்பதுதான் அந்த அறிவு மொழி!

காட்டு மிராண்டிகள் உபயோகித்த முரட்டு விவசாயக் கருவிகளைக் கண்டேன்; இன்றுள்ள நவீன விவசாயிக் கருவிகளையும் கண்டேன்; நீங்களும் காணமுடியும்; அப்போது உங்களுக்கே நன்கு தெரியும் எவ்விதம் மனிதன் முன்னேற்ற மடைந்திருக்கிருன் என்று!

மனிதன் எது விரைவில் தன் உழைப்போடு எண்ணத்தையும் கலக்கிவிட்டானே-எதுவரையில் இயற்கை சக்திகளோடு பங்கு கொண்டானே—தனது சுற்றுப் புற ஆற்றல்களை எதுவரையில் தனக்கேற்றபடி உபயோகித்துக் கொள்ள முயன்ருனே, பயத்தை எதுவரை அடித்து துரத்தி யிருந்தானே—எதுவரை தன் நம்பிக்

கையை முன்னேக்கி செலுத்தினனே—தெய்வ நம்பிக் கையை எதுவரையில் இழந்தானே—அது வரையில்—அந்த மனிதன் முன்னேற்ற மடைந்திருக்கிருன்.

பழைய மனிதனுடைய மண்டை ஓடுகளைக் கண்டேன். அத்துடன் தற்போதுள்ள மனிதனின் மண்டையோடுகளையும் கண்டேன் அதில்:- ஆதி மனிதன் ஆக்கி வைத்த பொருள்களுக்கும் இன்றுள்ள மனிதன் உண்டாக்கிவைத்திருக்கும் பொருள்களுக்கும் எவ்வளவு வேறுபாடுகள் - மாற்றங்கள் இருக்கின்றனவோ, அவ்வளவு வேறுபாடுகள் - மண்டை யோட்டிலும் இருப்பதைக் கண்டேன். அப்போது நான் "ஓ இவை யெல்லாம் அறிவு வளர்ச்சியை பொறுத்த விஷயங்கள்" என்று சொல்லிக் கொண்டேன்.

பண்டைக்கால தெப்பத்திற்கும் இன்றுள்ள போர்க் கப்பலுக்கும், ஆதிகாலத்துத் தடிக்கும்—இன்றுள்ள புகைக் கக்கும் பயங்கர ஆயுதமாகிய பீரங்கிக்கும், முன்னுளின் வெறும் மண் பூச்காலான ஓவியக் கலைக்கும்—இயற்கையான பூமி யழகுக்கும்-தம்பட்டிற் கும்-புதுமுறை வாத்தியங்கட்கும் - எவ்வளவு மாற்றங் கள் இருக்கின்றனவோ அவ்வளவு வித்தியாசங்கள் முற்கால மண்டை யோட்டிற்கும்-தற்கால மண்டை யோட்டிற்கும் இருக்கின்றன. பண்டைக்கால மனிதனின் மண்டை யோடுகளில் மனிதனின் கீழான சுபாவங்கள் நிறம்பக் கிடந்தன—இன்னுள் மனிதனின் மண்டை யோடுகளில், சுகம், உரிமை, அன்பு, சுதந்திரம், இவைகள் மிகுந்து காணப்படுகின்றன. ஏன் இந்த மாற்றம்? மூளையைப் பொறுத்த விஷயம்; அறிவு வளர்ச்சியின் ஆக்கம். நாம் நமது முன்னேர்களைவிட உரிமையுடன் இருக்கிருேம் என்ருல்; வசதிகளுடன் வாழ்கிருேம் என்ருல்—அதற்குக் காரணம் நம்முடைய மூளைதான். அந்த மூளையில் அதிகமான அறிவும் இருக்கிறது. இவைகள்தான் காரணம்.

நான் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன்:- சில விஷயங்களை உங்கள் மனசாட்சியின் முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன். அதை நீங்கள் நம்பிவிட வேண்டாம். உங்கள் அறிவால் அளந்து மனசாட்சிக்கு விரோதமில்லாமல் உங்கள் மனம் கூறும் முடிவை கூறுங்கள் என்றுதான் கேட்கிறேன்.

மத சம்பந்தமான துவேஷ எண்ணங்களை ஒரு கனம் அகற்றி விடுங்கள் வெறும் ஆண்களாய்-பெண்களாய் இருந்து சிந்தியுங்கள்.

பழைய காலத்துத் தெப்பமொன்றில் ஒரு புரோகிதனோ, அல்லது ஓர் அரசனோ ஏறிக்கொண்டு போகிறான்; அவன் செவிகள் அந்த காலத்துத் தம்பட்டையின் இசையை செவிமடுத்துக் கொண்டே செல்கின்றன. என்று வைத்துக்கொள்ளுங்கள்; இந்த இசையாலும் தெப்பத்தின் மீது செல்வதாலும் சொக்கிப் போன அவன்—"இந்த அருமையான தெப்பத்தை மனிதன் நிர்மாணித்தான். ஆண்டவன் கட்டளைப்படி அமைந்த சிறந்த படகு-இதை இன்னும் சிறந்த முறையில் செய்யலாம். பாய் மரங்களைக் கட்டியோட்டலாம் வேறுவித செயல்களால் இதனை அபிவிருத்தி செய்ய முடியும் என்று எவருவது நாவசைத்தால் அவனை தீயிலிட்டுப் பொசுக்கவேண்டும் அந்த நாத்திகன் நாவினைத் துண்டிக்க வேண்டும்" என்று கூறியிருந்தால் உலகம் இன்று இவ்வளவு தூரம் முன்னேறி இருக்கும் என்று நீங்கள் கருதுகிறீர்களா? சொல்லுங்கள் தோழர்களே! சிந்தித்துச சிறந்த பதில் சொல்லுங்கள்!

இதுபோலவே வேறொரு அரசனோ புரோகிதனோ இருந்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள் ஏன்? புரோகிதன் இருந்தான் என்றே வைத்துக் கொள்ளுங்கள் அதுதான் நல்லது. ஏனிப்படி சொல்கிறேன் என்று நினைக்காதீர்கள். அஃது அறியாமை இருள் நிறைந்திருக்கலாம்!

தம்பட்டை என்பது அற்புதமான இசைக் கருவி! இதைப் போல் எந்த மனிதனுவது சிருட்டிக்க முடியுமா? இந்த கருவியைத்தானே விண்ணுலகத் தேவர்களும் வைத்துப் போற்றுகின்றனர். இந்தக் கருவி தரும் இசை இன்பத்தில் சொக்கி விடுகின்றனரே தேவ லோகத்தினர். அவர்கள் இந்த வாத்தியத்தை மீட்டி, இசையினை எழுப்பி, அந்த இன்பத்தில் மயங்கி யிருந்த போது, அவர்களின் கை நழுவி பூமியில் வீழ்ந்துவிட்ட புனிதக் கருவி அன்றோ இஃது! இந்த விதமாகத்தானே இந்தக் கருவி கிடைத்தது, பூமியில் வாழும் மக்களுக்கு! இந்த அருமையான வாத்தியத்தை —தேவர்களின் திருக் கரத்தில் திகழ்ந்தது, நாம் செய்த புண்ணிய மிகுதியால் பூமியில் விழுந்து நம்மிடம் சிக்கிய இந்த ஈடு இணையற்ற அருமை வாத்தியத்தை-எவனேனும் அபிவிருத்தி செய்ய முடியும்; இதைவிட சிறந்த முறையில் சீர்திருத்தம் செய்ய முடியும் என்று கூறினல் அவனை உடனே கொஞ்சமும் தயங்காமல் கடவுள் விரோதி—கடவுளுக்குத் துரோக மிழைத்தவன்—அவனை மரண படுக்கையில் படுக்கவைத்து அழகு பார்க்க வேண்டும், அவன் மடியும் வரையில்"

இப்படி கருதி யிருப்பானே யானல் சங்கீதம் எவ்விதம் வளர்ச்சி அடைந்திருக்க முடியும்? நமது முன்னேர்கள் இப்படி செய்திருப்பார்கள் என்று நீங்கள் கருத முடியுமா? அப்படி கருதுவீர்களானல் நாம் இப்போது பீத்ஹோவன் என்னும் ஜெர்மானிய இசைப் புலவனுடைய உயிருள்ள இசையைப் பருகிக்கொண்டிருக்க முடியுமா?—என்று கேட்கிறேன். சிந்தித்து முடிவு கட்டுங்கள், மூளை பலமுள்ளவர்களே!

இது போலவே மற்றுமோர் முறை அரசனே அல்லது புரோகிதனே "இந்த கோணலான தடியிருக்கிறதே இதுதான் மனிதன் முதன் முதலில் கண்டு பிடித்த அற்புதக் கருவி. இந்த வளைந்த தடியினுல்தான் விவசாயம் நடை பெறுகிறது. இது எப்படி இந்த நிலை

உலகிற்கு வந்தது என்று கேட்பீர்கள். நீங்கள் கேட்ப தற்கு முன் சொல்லிவிடுகிறேன். ஓர் ஊரில் ஒரு விவ சாயி! விவசாயி என்றால் அவன் எல்லா விவசாயிகளைப் உண்பதும்—உடுப்பதும்—ஓய்வு கொள்வதும்—மனைவி மக்களிடம் கொஞ்சுவதுமா யில்லை—அல்லும் பகலும் ஆண்டவனை மறவாதவன்—பக்தி செய்துகொண்டிருப் பதுதான் மனிதப் பிறவியின் மகத்தான கடமை என்று உணர்ந்தவன். இப்படிப்பட்ட பக்திமானின் பக்திக்கு மெச்சிய பரமன் அவன் தூங்கும்போது சொர்ப்பனத் திலே தோன்றி—பக்தா உன் பக்திக்கு மெச்சினோம் பயப்படாதே! இந்தா இதைப் பெற்றுக்கொள் என்று ஆண்டவன் கூற—பக்தன் பயபக்தி, விசுவாசத்துடன் தன்னிரு கால்களையும் நீட்ட—வளைந்த தடியினை அவன் முன் நீட்ட பயத்துடன் வாங்கிய பக்தியின் "பிரபோ இது ஏன்? என்று கேட்க— "பேதாய் கேள்! இதைக் கொண்டு நிலத்தினை உழுதால் உன் உழைப்பு குறையும்—விளைவு அதிகரிக்கும். இறுதியில் என் திரு வடி நிழலில் நீங்காத நித்திரை பெறுவாய்" என்று கூறி மறைந்தார். ஆகவே இந்த அதி அற்புத கருவியை மாற்றவோ—வேறு புது முறைக் கருவிகளை உண்டாக் கவோ எவனேனும் நினைத்தால்—அவன் நாஸ்திகன்" என்று கூறியிருந்தால் இன்று உலகில் விவசாய அறிவு இவ்வளவு முன்னேற்றம் எப்படி அடைந்திருக்க முடி யும் என்று யோசித்துக் கூறுங்கள்! யோசிக்கும் திறமை நிறைந்தவர்களே!

ஆம் தோழர்களே இப்படி! கூறியிருக்க மாட்டார் கள். ஆனால் எப்படிக் கூறியிருப்பார்கள்? "நமது உடன் பிறந்த கிருத்துவர்களைக் காப்பாற்ற இப்போதிருக்கும் கலப்பை போதாது. இன்னும் சிறந்த முறையில் கலப் பைகள் தயாரிக்க வேண்டும்—இன்றுள்ள சங்கீதம் இன்னும் நல்ல முறையில் அபிவிருத்தியடைதல் வேண் டும்—சித்திரங்களை உயர்ந்த முறையில் உண்டாக்க வேண்டும். இந்த மேலே சொன்ன முறைகளைக் கண்டு

பிடித்துக் கொடுத்து—வசிப்பதற்கு நல்ல வீடும்-உடுப்பதற்கு நல்ல உடையும் கொடுக்கிறானே, அவனைச் செல்வத்தால் அலங்கரிப்போம்—கண்ணியமான முடியைச் சூட்டுவோம்'' என்று கூறி யிருப்பர், யார்? மக்கள்—மன்னன்—குருக்கள் ஆகிய மூவரும் சேர்ந்தே கூறியிருப்பர்.

மேற் சொன்னபடி மக்களும், மன்னனும், புரோகிதனும், நல்ல முறையில் தூண்டுதல் செய்ததால் தான், ஆதி மனிதன் கையை அலங்கரித்துக் கொண்டிருந்த குறுந்தடி என்ற ஆயுதம்; நெருப்பினைக் கக்கும் பீரங்கியாக வளர முடிந்தது.

அது போலவே. சிறு தெப்பம் பெரிய நீராவிக் கப்பலாக மாறியது. சாதாரணமான கரடு முரடான பாறாங்கற்கள் அழகிய உருவத்தை தாங்கி நிற்கும் சிலைகளாக மாற முடிந்தது.

தெப்பத்தில் மிதந்து சென்றானே அந்த மனிதன்-தம்பட்டைதான் சிறந்த ஆயுதம் என்று கருதி, களிப்படைந்திருந்தானே அந்த மனிதன்—வளைந்த தடிதான் தகுதியான கருவியெனக் கருதி நிலத்தை உழுதானே அந்த மனிதன்—அவனுக்கும் ஒரு மதம் இருக்கத்தான் செய்தது. வைதீகத்தை வளர்த்துத்தான் வந்தான். ஆனால் அவனுக்கு, சந்தேகம் என்பது என்றுமே உதிக்கவில்லை. முழு நம்பிக்கையுடன், தான் வாழ்ந்து வந்தான். அதைப் போலவே இறந்து விட்டான். அவனிடம் ''நரகம் என்ற ஓர் இடம் உண்டு'' என்றனர். ''சரிதான்'' என்று ஒத்துக்கொண்டான். அது பாவிகளின் இருப்பிடம் என்றனர். ஏற்றுக் கொண்டான். யாராவது அவனை அணுகி ''அப்பா! அவன் எதையோ சொன்னான் அப்படியே ஏற்றுக் கொண்டாயே? எங்கே இருக்கிறது அந்த நரகம்? இங்கிருந்து எவ்வளவு தூரம்-வழி எப்படி? என்று ஏதாகிலும் கேட்டாயா?'' என்றால் அவன் கண்களிலே கோபப் பார்வை கூத்தாட வெறுப்புச் சிரிப்பை அவன் மீது வீசி எறிவதன் மூலம்

மோட்ச சாம்ராஜ்ஜியத்தின் திறவு கோலைப் பெற்று விட முடியும் என்று நம்பினான்.

கண்ணை மூடிக்கொண்டு எதையும் ஆராயாமல் நம்புகின்ற மனிதனுக்கு அறிவும்—தெளிவும்-நிறைந்த சந்ததியார் தோன்றினர். அவர்கள் தோன்றியது வருத்தத்திற்குரிய நிகழ்ச்சிதான். ஆனால் அவர்கள் உலகிற்குத் தேவைப்பட்டனர். இஃது உண்மை. இது மாத்திரமல்ல, புத்திசாலிகளைவிட மூடர்கள்தான் உலகத்திலே அதிக வேகத்துடன் அபிவிருத்தி அடைகின்றனர், என்பது உங்களுக்குத் தெரியுமா?

தெப்பத்தில் மிதந்து சென்ற மனிதன கடவுளை எப்படிக் கருதியிருந்தான் என்பது உங்களுக்குத் தெரிய வேண்டும். கடவுளை ஒரு கொடுங்கோலனாகவே கருதி வந்தான். ஒரு இலட்சியத்தை வகுத்துக்கொண்டு அதன்படி நடந்து வருவானாகில், அவன் என்றுமே மீள முடியாத நரகத்தில் கட்டாயம் தள்ளப்படுவான் என்று தான் கருதி வந்தான். இந்த உலகம் தட்டை என்று தான் அவன் தீர்மானித்திருந்தான். நரகம் என்பது ஓர் அக்கினி ஜுவாலை வீசும் இடம் என்பது அவன் நினைப்பு.

ஒரு நியாயத்தை நிலை நிறுத்த வேண்டுமென்றால் பலாத்காரத்தைச் செலுத்தித்தான் நிலை நிறுத்த முடியும் என்பது அவனுடைய அரசியல் அறிவால் அறிந்த தெளிவு. உலகில் இந்த கொள்கை மாற பல ஆயிரமாயிரம் ஆண்டுகள் கழிந்தாக வேண்டும் என்று கருதுகிறேன்.

அன்புடையவர்களே! நான் என்ன கேட்கிறேன் தெரியுமா? எப்படி மனிதன் தன் இசைக் கருவி தம் பட்டத்திலிருந்து சிறுகச் சிறுக முன்னேறி உயர்ந்த இசைக் கருவிகளைக் கண்டு பிடித்தானோ—அப்படியே அவனுடைய தத்துவ ஞானத்தையும், அதாவது அறிவு

வளர்ச்சியை அபிவிருத்தி செய்து கொள்ள இடுங் கொடுங்கள் என்பதுதான்!

தன்னுடைய சிறிய தெப்பத்தை எப்படி பெரிய தொரு நீராவிக் கப்பலாக விருத்தி செய்து கொண் டானே, அதுபோலவே, அந்த மனிதனுடைய அரசிய லையும் அபிவிருத்தி செய்ய இடங்கொடுங்கள் என்பது பதுதான். இவ்வளவுதான் நான் கேட்பது.

மனித உருவத்தில் நடமாடும் உயிர்களுக்கு எல்லா மார்க்கங்களிலும் உரிமை இருக்க வேண்டும் என்பது தான் என்னுடைய எண்ணமாகும். உங்களை சிந்தியுங் கள் என்று தூண்டுகின்றேன். இதைத்தான் குற்றம் என்று கூறுகிறது உலகம். இந்த ஒரு குற்றத்தை நான் செய்திருக்கிறேன். நாம் சிந்தனை செய்யவேண்டும் என்பதுதான் என் வேண்டுகோள். ஒவ்வொருவரும் அவனுடைய கருத்தை வெளியிட வேண்டும். நாமனை வரும் புதிய விஷயங்களை ஆராய்ச்சி செய்யவர்களாக இருக்க வேண்டுமே அன்றி பிறரை கண்ணை மூடிக் கொண்டு பின் பற்றும் பேதமையை ஒழிக்க வேண்டும். நம் போன்ற மனிதனிடத்தில் கெஞ்சுகிறவர்களாக நாம் ஒருக்காலும் இருக்கக் கூடாது. மற்றவர்கள் முன் ஊர்ந்து செல்லும் மிருகங்களைப் போல் இருக்கத் தேவையில்லை.

தேவலோகம் என்று ஒன்று இருக்குமானல்-அதில் எல்லையற்ற இறைவன் இருப்பது உண்மையானல், அவர் கோழைகளின் வணக்கத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார். நய வஞ்சகர்களின் செயல்களைக்கண்டு மகிழ மாட்டார். இந்த வஞ்சகர்களைக் கண்டு ஒருக்காலும் திருப்தியடைய மாட்டார்.

நீங்கள் என்னை நம்பவில்லையா? மனப்பூர்வமாக நம்பவேண்டாம். கடவுளிடத்தில் பக்தி—ஆசை உண் டாகவில்லையா கொஞ்சமும் பயப்பட வேண்டாம். அல் லது என்னை நாஸ்திகன் என்று சொல்லப் பிரியப்படு

கிறீர்களோ அதைப் பற்றியும் பயங்கொள்ளாமல் தைரியமாக ,மறைக்காமல்—மனப் பூர்வமாகச் சொல்லுங்கள். அப்படிச் சொல்லும் உங்களின் உண்மைக் குரல் தான் பரமண்டலத்தில் தன் நறுமணத்தை எழுப்புமே ஒழிய, பக்தி என்னும் போர்வையினுல் மூடப்பட்டுக் கிடக்கும் நயவஞ்சகம் வெளிப் பார்வைக்கு எவ்வளவு சமயச் சார்புடைய தாய் இருந்தாலும், பரலோகத்தில் அதனுடைய மூக்கு வைக்க முடியாத துற்நாற்றத்தையே உண்டு பண்ணும்.

இதுதான் என் கோட்பாடு! உங்களுக்கு எந்தெந்த உரிமைகள் தேவை என்று கருதுகிறீர்களோ அதே உரிமைகளை எல்லா மனிதர்களுக்கும் வழங்குங்கள். இயற்கையின் தன்மைகள் உங்கள் இதயத்தில் நிறையவேண்டும். அது உள்புக உங்கள் உள்ளக் கதவை சற்று திறந்து வையுங்கள். புதிய எண்ணங்களுக்கு வரவேற்புக் கொடுங்கள் அதுதான் நாம்—மனித குலம் முன்னேறும் வழி.

இன்றுள்ள மதவாதி—சமயவாதி தன் உயிராகிய கப்பலை, வைதீகம் என்னும் துறைமுகத்தில் கட்டி போட்டுவிட்டான், அந்தக் கப்பல் வெயிலிலே காய்கிறது. பழைய கொள்கைகள் என்ற பாய் மரத்தின் மீது பழைய எண்ணங்கள் என்னும் கப்பற்பாய் அடிபட்டு அலறும் ஒலியைக் கேட்டுக் கொண்டிருப்பதிலே நிம்மதி அடைகிருன். கப்பலின் இணைப்புகள் சந்துவிடுகிறது. பக்கங்கள் வெடித்துத் துளைகளை ஏற்படுத்துகிறது. இதைக் கண்டு மகிழ்ச்சி அடைகின்றுன். "என் மனதைக் கலக்காதீர்கள்; என் எண்ணத்தை மாற்ருதீர்கள், நான் ஏற்கனவே ஒருவித எண்ணம் கொண்டுவிட்டேன்; அந்தத் தீர்ப்பை நான் மாற்ற மாட்டேன். எனக்கு நாத்திக வாதம் வேண்டாம்; நான் பின் நோக்கி செல்வேனே தவிர முன்னேற மாட்டேன் என்று மேலும் சொல்லிக் கொண்டிருப்பதில் இன்பம் காண்கிறேன். ஆனல் நான் எதை நினைக்கிறேன் என்பதை

யும் சொல்ல வேண்டியவனு யுள்ளேன். நானும் அந்தப் பெருங் கடலைக் கடக்கத்தான், விரும்புகின்றேன், காற்று, அலை, விண்மீன்கள் இவைகளோடு என் அதிர்ஷ்டத்தையும் பிணைத்துக் கொண்டுதான் போக விரும்புகின்றேன். புயல் காற்றுடன், பெருமையாகவும் புகழோடும் நான் அடித்துக்கொண்டு போகப்படுவதில் திருப்தி அடைவேனே தவிர, வைதிகம் என்னும் துறைமுகத்தில் சீரழிந்து கிடக்க ஒரு நாளும் விரும்ப மாட்டேன்.

எது எப்படிப் போனுலும் யுகத்திற்கு யுகம் மனித இனம் முன்னேறிக் கொண்டுதான் இருக்கிறது. இப்போது நமது நாட்டில் வைதிகர்கள் என்று பெருமையோடு சொல்லிக் கொண்டிருக்கிறுர்களே, அவர்கள் இருநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்தால் அவர்களை வேதப் புரட்டார்கள் என்றுதான் கூறியிருப்பர். அத்துடன் நின்று விடாமல் அவர்களைத் தீயிலிட்டுப் பொசுக்கியும் இருப்பர். இப்போது நான் கூறும் கருத்துக்களைக் கண்டிக்கும் பாதிரிமார்கள் அந்தக் காலத்தில் குற்றவாளிகளாக்கப்பட்டு கூண்டிலேற்றி நிறுத்தப்பட்டிருப்பர். முன்னேற்றம் என்னும் சேனையானது எங்கே தங்கி நெருப்புப் போட்டு குளிர் காய்ந்ததோ அதே இடத்தில் இப்போது தேவாலயத்தின் பலி பீடங்கள் தோன்றியிருக்கின்றன. நூறு ஆண்டுகளுக்கு முன் நாஸ்திகர்கள் நின்ற இடத்தில் இன்றைய சமய வாதிகள் நிற்கிறுர்கள்.

அதாவது கோயில் தன்னையும் மீறிக்கொண்டு முன்னேறிக் கொண்டு வந்திருக்கின்றது. அந்தக் கோயில் ஸ்தாபனம் முன்னேற்றச் சேனையைத் தூஷித்துக் கொண்டும் கண்டணக் கணைகளை அதன் மீது எய்துக் கொண்டும் பின் தொடர்ந்தே வந்துகொண்டிருக்கிறது. அது முன்னேற்றச் சேனைக்கு, சற்று எட்டிய தூரத்திலிருந்து கொண்டே பின் தொடர வேண்டியதாயிற்று. இப்படி இந்தத் தெய்வச் சபை முன்னேற்ற

மடைந்திரா விட்டால் நான் இன்று உங்கள் முன் என் கருத்துக்களை எடுத்துக் கூறி இருக்க இயலாது. மனிதன் உழைப்பின் சக்தியை மாத்திரம் பயன் படுத்தினால் போதாது. அந்த உழைப்புடன் தன் எண்ணத்தையும் கலக்க வேண்டும் அப்படி உழைப்பும், எண்ணமும் கலந்து வேலை செய்யத் துவங்கினால் முன்னேறுகிறான்.

கப்பலை ஓட்டும் ஒரு மாலுமி காற்றையும், அலையையும் கட்டுப்படுத்த தெரியாமல், சமுத்திரத்தின் சூழல்களைப்பற்றி அறிந்து கொள்ளாமல் இருப்பானே ஆனால் அவனை நான் மூட நம்பிக்கை கொண்டவன் என்று கூறிவிடுவேன். விவசாயின் நிலைமையும் இப்படியே தான், அவனுடைய வாழ்வு அவனால் கட்டுப்படுத்த முடியாத ஒன்றைப் பொறுத்தது. ஆனால் யந்திரத்தில் வேலை செய்யும் ஒருவன் அப்படியல்ல! அவன் வேலை செய்யும் யந்திரத்தில் ஏதாகிலும் ஒரு சக்கரம் நின்றுவிட்டால் அதற்காக அவன் ''பரமண்டலத்திலுள்ள எங்கள் பிதாவே! இந்தப் பாழான யந்திரம் ஓடவில்லை! பகவானே தயவு செய்து அடியேன் மீது அருள் பாலித்து இந்தச் சக்கரத்தை ஓடச்செய்யுங்கள்'' என்று பிரார்த்தனை செய்வான்? சக்கரம் ஏன் ஓடவில்லை என்பதை அவன் அறிவான்; யந்திரத்தில் ஏதாகிலும் கோளாறு ஏற்பட்டிருக்கும் என்று உணர்வான்; ஓடாத சக்கரம் ஓடும்வரை தனக்குத் தெரிந்த முயற்சிகள் செய்து அதை ஓடும்படிச் செய்ய முயல்வான். அது போல மனிதன் எவ்வளவுக் கெவ்வளவு தன்னைச் சுற்றியுள்ளவைகளுக்கு அடிமை படாதிருக்கிறானோ—எவ்வளவுக் கெவ்வளவு தன் ஐம்பூதத்திற்கு அடிமைப் படாமல் இருக்கிறானோ—அவ்வளவுக்கவ்வளவு அவன் தன் நெறியை வகைப்படுத்திக் கொண்டவனாகிறான். இயற்கையால் ஏற்படும் தொந்தரவுகளை எவ்வளவு தூரம் சமாளிக்கிறானோ அந்த அளவுக்கு உடலுரமும் —உள்ளபலமும்—அறிவு வளர்ச்சியும் உடையவனாகி

முன்னேறுகிறன். அவன் அறிவு வளர வளர தன் சொந்த உரிமைகளுக்கு அதிக மதிப்புக் கொடுக்கிறன். அப்போது தன் உரிமை என்பது—நன்கு புரிகிறது. சுதந்திரத்தின் பொருள் உணர்கிறன். உரிமை என்பது ஒரு கம்பீரமான பொருளாகவும், உயர்ந்த தன்மை உடையதாகவும் அவனுக்குக் காட்சி யளிக்கிறது. அப் போது அவன் தன் சொந்த உரிமைக்கு எவ்வளவு மதிப்பு கொடுக்கிறனே அதே மதிப்பும்—மரியாதை யும் பிறருடைய உரிமைக்கும் தர ஆரம்பித்து விடுகி றன். இந்த உலகம் எப்போது நகரீகம் அடையும் என் றல், என்று எல்லா மனிதர்களும், தங்களுக்கு இருக் கும் உரிமைகளைப் போல மற்றவர்களுக்கும் இருக்க வேண்டும் என்று கருத ஆரம்பித்து விடுகிறர்களோ அப்போதுதான் இந்த உலகம் நாகரீகம் மடைந்த உல கம் என்று பெயர் பெறும்.

சில ஆண்டுகளுக்கு முன்னர்வரையில் மக்கள் எப் படி யிருந்தனர்? அரசனிடம் பேசப் பயந்தனர். புரோகிதனிடம எதிர்த்துப் பேச அஞ்சினர். ஒரு சம யத்தைப் பற்றி ஆராய அவர்கள் மனதில் திடமில்லை. ஒரு நூலை மறுக்க மனவலிவு கிடையாது; ஒரு கோட் பாட்டைத் தவறு என்று சொல்லத் தயங்கினர், தர்க் கம் செய்ய அவர்களால் முடியவில்லை; சொந்தமாகச் சிந்திக்கவே பயந்தார்கள்; செல்வத்திற்கு முன் அவர் களின் தலைகள் குனிந்தன. ஆனல் இவைகள் எல்லாம் இப்பொழுது மெள்ள மெள்ள—ஆனல் நிச்சயமாக மாறிக் கொண்டு வருகின்றன. பணம் படைத்தவன் என்ற காரணத்திற்காக ஒருவனை வணங்கும் செயல் இப்போது நடை பெறுவதில்லை.

இப்போது மனிதனின் ஆசை அரச பதவியையோ —சக்கரவர்த்திப் பதவியையோ அடைவதில் திருப்தி அடைவதில்லை. கடைசி நெப்போலியன், தான் பிரஞ்சு நாட்டின் மன்னனுக இருந்து விடுவதோடு மட்டும் நிம் மதி அடையவில்லை. அவன் முடியில் பொன் மயமான

மணிமுடி அழகு செய்து கொண்டிருந்ததோடு அவன் நிம்மதி கொள்ளவில்லை. தன் தலைக்குள் பெரிய மதிப்பைப் பெற்றுத் தரக்கூடிய பொருள் ஒன்று மறைந்து கிடப்பதாய் அவன் உணர்ந்தான். அதை எடுத்துக் காட்டி நிரூபிக்க பேராவல் கொண்டான். அதன் காரணமாக, பிரஞ்சு நாட்டு அறிவுக் கழகத்தில் ஓர் உறுப்பினனாகவிரும்பினான்; அப்படியே ஆனான். பின்னர் "ஜூலியஸ் சீஸரைப்" பற்றிய வரலாறு எழுதினான். பின்னர் தான் மன அமைதி பெற்றான்.

மன்னாதி மன்னர்கள்—அரசர்கள்—போப்பாண்டவர்கள் முதலியவர்கள், மற்ற மனிதர்களைக் காட்டிலும் எதிலும் உயர்ந்தவர்கள் அல்லர். ஜெர்மனிய நாட்டு நாட்டு மன்னன் "வில்லியம்" (கெய்ஸர்) மன்னனையும் ஹேக்கல் என்னும் ஜெர்மனிய நாட்டுத் தத்துவறிஞனையும் ஒப்பிட்டுப் பாருங்கள். அரசன் மிகவும் உயர்ந்தவன் மற்றவர்கள் அவன் சொற்படி நடக்க வேண்டும் என்று கூறுகின்றனரே, ஒரு சிலர் (புரோகிதர்கள்) அவர்களால்தான் மன்னன் அபிஷேகிக்கப்படுகிறான்: புரோகிதர்கள் மன்னன் தலையில் அதிகாரம் என்னும் தெய்வத் தன்மை நிறைந்த பெட்ரோல் எண்ணையை கொட்டுகிறார்கள்.

இந்த மாதிரியான அரசன் முன் ஹெக்கல் என்னும் தத்துவஞானியை ஒப்பிட்டுப் பாருங்கள். அவன் மனிதனுடைய அறிவு வளர்ச்சியைப் பற்றி சிறந்த முறையில் ஆராய்ந்து மக்களிடம் கொடுத்திருக்கிறான். அந்தப் புலவன் மணிமுடி தரித்த அந்தச் சாதாரண மன்னனைவிட அறிவொளியுடன் பிரகாசிக்கின்றான். அறிவுக்கு எப்போதும் உலகம் தன் வணக்கத்தைச் செலுத்தும்; திறமைக்கும் ஆதரவளிக்கும். தூயமனத்தையும் வரவேற்கும், இந்த வையம்.

நாம் முன்னேறி யிருக்கிறோம், புனிதமான வீரம் நிறைந்த ஒவ்வொரு தியாகியின் வீரம் பொருந்திய ஒவ்

வொரு செயலின் சாதகத்தையும் நாம் அடைந்திருக்கிறோம். அந்தச் சாதகத்தின் மூலம் பெற்றிருக்கும் இந்த அறிவொளியை நாம், நமது தியாகத்தின் மூலம் சற்று அதிகமாக்கி நமது பின்னோர்கள்—அதாவது அடுத்த தலைமுறையினருக்கு வழங்க வேண்டும்.

இந்த உலகம் எவ்வளவு துன்பத்திற்கு ஆளாகியிருக்கிறது? நம் முன்னோர்கள் எவ்வளவு காலம் அடிமைகளாய் இருந்திருக்கின்றனர்? சிங்காதனத்தின் அடியில் வீழ்ந்தும், தேவாலய பலிபீடத்தில் சாய்ந்தும், அவைகளிடம் கெஞ்சியும், பணிவு காட்டியும் கிடந்தனர்.

எவ்விதம் அவர்கள் தங்களைக் கேவலப்படுத்திக் கொண்டனர்? ஆடம்பர அலங்கார உடையும், முடியும் தரித்த மூட நம்பிக்கையின் திருக்கோயில்முன் அவர்கள் தங்களைத் தாழ்வுப் படுத்திக்கொண்டது எப்படி? இவைகளையெல்லாம் நினைத்துப் பார்க்கிறபோது, நான் ஆச்சரியம்தான் அடைகின்றேன்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரை இந்த உலகம் மனிதன் வாழ தகுதியில்லாத படிதான் இருந்திருக்கிறது 1808-ஆம் ஆண்டு வரை, கிரேட் பிரிட்டன் தன் அடிமை வியாபாரத்தை ஒழிக்க வில்லை. அந்த நாட்டு நீதிபதிகள் வழக்கு மன்றங்களில் அமர்ந்து கொண்டு நீதியின் பெயரால்—ஆடம்பர வாழ்வு நடத்தி வந்தனர். அது போலவே பிரசங்க மேடையின்மீது அமர்ந்து கொண்டு விசுவாசப் பிரேமையின் பேயரால் அடிமை வியாபாரத்தின்மூலம் கிடைக்கும் லாபத்தால் உல்லாச வாழ்வு நடத்தி வந்தனர், அதுவரையில், 1808-ஆம் ஆண்டுவரையில் அமெரிக்கா பிற நாடுகளுடன் அடிமை வியாபாரம் செய்வதை நிறுத்தவில்லை. பின்னர் அமெரிக்காவுக்குள்ளேயே ஒரு மாகாணத்திற்கும் மற்றொரு மாகாணத்திற்கும் இந்த வியாபாரம் நடந்து வரலாம் என்ற வழக்கம் மட்டும் இருந்து வந்தது. அடிமைகளாக நடத்தப்படும் செய்கை தன் குடியேற்ற நாடு

களின் இருப்பது கூடாது என்று 1833-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28-ம் நாள் கிரேட் பிரட்டன் தீர்மானித்தது. 1863-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி. ஆப்ரஹாம் லிங்கன் அடிமை வியாபாரத்தை அடியோடு ஒழித்தான்—அமெரிக்காவின் கொடி எந்த தூய்மையான வெளியில் பறந்து கொண்டிருந்ததோ அந்த சுத்த வெள்ளையைப்போல் தூய்மை படுத்தினான்.

அமெரிக்காவின் பிரசிடெண்ட்டுகளில் தலை சிறந்த ஒருவன் அப்ரகாம் லிங்கன் என்பது என்னுடைய உறுதியான எண்ணம். அவனின் நினைவுச் சின்னத்தின் மீது "முழு உரிமையும்; அதிகாரத்தையும் பெற்றிருந்தும், அவைகளைக் கருணைக்காகத் தவிர வேறு வீதங்களில் துஷ்பிரயோகப் மடுத்தாத ஓர் உத்தம மணிதன் உலக வரலாற்றிலேயே இவன் ஒருவன்தான்! அத்தகு உன்னத புருடன் இதோ இங்கு நித்திரை செய்கிறான்" என்று எழுத வேண்டும்.

கொஞ்சநேரம் யோசித்துப் பாருங்கள்! அடிமை வழக்கத்தை எவ்வளவு காலம்வரை விடாப் பிடியுடன் பிடித்துக் கொண்டிருந்தோம் என்று! ஓயாமல் உழைத்தவனுக்கு திறந்த முதுகின் மீது சவுக்கால் அடிப்பது தான் சட்ட ரீதியான செயல் என்பதை எத்தனை வருடங்களாக ஏற்றுக்கொண் டிருந்தோம். இதுமட்டுமா! இந்த நாட்டின்பேச்சு மேடைகளை தன்னுடையதாக்கிக் கொண்ட புரோகிதக் கூட்டமானது வேண்மென்றே முழு சம்மதத்துடன் நூறு ஆண்டுகள் வரை, கிருத்து நாதரின் சிலுவையை சவுக்கடி கொடுக்கும் தம்பமாக மாற்றி வைத்தது என்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள்!

ஆம்! தோழர்களே—அறிவைப் பாராட்டாமல் தடைசெய்து நிறுத்தும் அடிமைத் தனத்தை கொடுங் கோலாதிக்கத்தை என் உடம்பிலுள்ள ஒவ்வொரு துளி ரத்தமும் கண்டிக்கிறது. அதனை துவேஷிக்கிறது-பிறர் அதிகாரம் என்று கூறுவதை நான் வெறுக்கிறேன்—

ஆனால் அதே சமயத்தில் சுதந்திரத்தை உரிமையை—விடுதலையை—விரும்புகிறேன்.

சுதந்திரம் என்ற பெயரால் - எதை அழைக்கிறேன் கேளுங்கள் தோழர்களே, கேளுங்கள்!

நான் விரும்பும் சுதந்திரம் இரண்டு: அதில் ஒன்று, உடல் சம்பந்தப்பட்ட சுதந்திரம்: மற்றொன்று அறிவு சம்பந்தப்பட்ட சுதந்திரம். தேக சம்பந்தப்பட்ட சுதந்திரம் என்றால் பிறருடைய இன்பத்தைப் பங்கப்படுத்தாது எதையும் செய்யும் உரிமை. அதுதான் நான் விரும்புவது.

அறிவு சம்பந்தப்பட்ட சுதந்திரம் என்றால் சரியாக நினைக்கும் உரிமையும்—தவறாக நினைக்கும் உரிமையும் ஒருவனுக்குக் கொடுக்கப்பட வேண்டும் இதைத் தான் நான் சொல்வது. உண்மையை அறிவதற்குச் சாதனம் சிந்தனை. நாம் உண்மையை அறிந்திருந்தால் சிந்திக்க வேண்டிய அவசியமே யில்லை.

நான் விரும்புவதெல்லாம் நாம் எண்ணும் எண்ணத்திலே, தூய்மை இருக்கவேண்டும் என்பதுதான். நீங்கள் எதாகிலும் ஒரு விஷயத்தைப் பற்றி என் கருத்தை அறிய விரும்பி என்னைக் கேட்டால், அதை நான் ஆராய்ந்துப் பார்ப்பேன். பிறகு அதைப் பற்றி நான் என்ன நினைக்கின்றேனோ அதைச் சொல்லவேண்டுமல்லவா? என்னிடம் ஒரு நூலைத் தந்து "ஐயா" இஃது இறைவன் அருளால் வெளிவந்தது? என்று கூறுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள் அவர்கள் கூறுவதை நான் நம்பவில்லை. இதைத்தானே நான் சொல்லவேண்டும்? என் மனதில் பட்டதைத்தானே தைரியமாக எடுத்துக்கூறவேண்டும்? அதுதானே சரி! அதை விட்டு விட்டு என் மனம் ஒப்புக் கொள்ளாத ஒன்றை, நயவஞ்சகர்களைப்போல் நடித்து என் மனம் ஒப்புக் கொண்டதாகக்கூறி கோழைபோல் பணிந்து போவதை நீங்கள் பாராட்டுவீர்களா? அந்தச் செய்கை நல்லதா? யார் எப்

படி நினைத்தாலும் நான் என் மனதில் பட்டதைத் தைரியமாக எடுத்துச் சொல்லும் மனிதத்தன்மையைத் தான் விரும்புகின்றேன். என்னைப் பொறுத்தமட்டில், நான் நினைக்கின்றேன் மனிதத் தன்மையை அடியோடு ஒழித்து விட்ட ஆஸ்திகனைவிட, மனிதத் தன்மையை பத்திரமாகப் பாதுகாக்கும் நாஸ்திகனுகவே இருக்க ஆசைப் படுகிறேன்,

கடைசி நாள் ஒன்று வருமென்றால், அன்று பரமண்டல கர்த்தர் முன் மக்கள் தீர்ப்பு பெற அவர் முன்னிலையில் நிறுத்தப் பெற்றால், தன்மனம் நம்பாத ஒன்றை நம்புவதாகப் பாசாங்கு செய்து கொண்டு அறிவாளிகளின் அறிவுக்குமுன் நிற்கமாட்டாமல் மறைந்து மறைந்து வாழ்கிறானே, அவனைக் காட்டிலும் தைரியமாக என் தலை நிமிர்ந்து நிர்ப்பேன். என் கட்சி அங்கு வெற்றி பெறும் வாய்ப்பும் நேரும்.

நான் எதை எதை சொல்ல வேண்டும் என்று தீர்மானித்து விட்டேனே அவைகளைக் கட்டாயம் சொல்லியே முடிப்பேன். அவ்விதம் முடிவு செய்துகொண்டு தான் உங்கள் முன் நிற்கின்றேன். ஆனால் அதை அன்பாகவும்-தெளிவு ஏற்படும் விதத்திலும் சொல்வேன். இப்படி நான் கூறுவதை ஏற்றுக்கொள்ளும் மக்கள் ஏராளமாக இருக்கின்றனர். அதுவும் எனக்குத் தெரியும். ஆனால் அவர்கள் தங்கள் கருத்துக்களை வெளியில் எடுத்துப் பேசும் நிலைமையில் இல்லை. அவர்களில் பலர் ஏழைகள், சிலர் வாணிபம் செய்வோர் அவர்கள் தங்கள் மனதில் பட்டதை வெளியில் சொன்னால் தங்களை எவரும் ஆதரிக்க மாட்டார்கள், தங்களிடம் வாணிபம் செய்ய எவரும் வரமாட்டார்கள், என்று பயப்படுகின்றனர். அவர்கள் வேறு என்ன செய்ய முடியும்? தங்கள் மனைவிகளைக் காப்பாற்ற வேண்டும்-மக்களை போஷிக்க வேண்டும். வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழவேண்டும் வாழ்வின் இன்பத்தை ருசித்துப் பார்க்க வேண்டும், என்பது அவர்களின் ஆவல் அப்படிப்பட்ட ஒவ்வொரு

மனிதனும், அவன் எந்த சமுதாயத்தில் வசிக்கிருனே அந்தச் சமுதாயத்தின் சீர்கேட்டிற்கு ஒரு நற்சாட்சி பத்திரம் மாதிரி!

இவர்கள் தங்கள் எண்ணங்களை வெளியிட்டுச் சொல்லவில்லையே என்பதற்காக இவர்களை நான் குற்றம் கூறுவதாக நினைக்க வேண்டாம். நான் என்ன சொல்கிறேன் என்றால், உங்கள் மனம் தரும் முடிவை உங்களிடமே வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் யாரை நேசித்தீர்களோ அவர்களுக்கு உணவு கொடுங்கள்—உடை தந்து உதவுங்கள். ஆனால் உங்களுக்காக நான் பேசுகின்றேன். தெய்வத் திருச்சபை என்னைத் தொட முடியாது. என்னை நசுக்கும் ஆற்றல் அதனிடம் கிடையாது. அது என்னைப் பட்டினி போடாது. எனக்கு எந்தவித தடைகளும் போடமுடியாது அதனால், ஆகவே உங்களுடைய எண்ணங்களை நான் வெளியிடுகிறேன், என்பதுதான்.

கொடுங்கோல் ஆதிக்கத்திற்கு மன்னிப்பு கேட்கிறார்களே அதுபோல், அடிமை வழக்கத்திற்கு சமாதானம் சொல்லவில்லையா? அது போல இந்த தெய்வத் திருச்சபையானது "மனிதன் நீசகுணம் படைத்தவன்" என்ற போதனையைப் போதித்து வந்திருக்கிறது. இதற்கு ஓர் ஆதாரத்தையும் துணைக்கு அழைத்துக் காட்டுகிறது. அதாவது மக்களில் சிலர் நல்லவர்கள்—சிலர் கெட்டவர்கள் மனிதர்களிலே கேவலமானவர்கள்; சில நல்ல காரியங்களைச் செய்யக் கூடியவர்களாகவும் உயர்ந்த மனிதர்கள் கெட்டக் காரியங்களைச் செய்யக் கூடியவர்களாகவும் இருக்கிருர்கள். கீழ் மக்கள் உயரலாம் - மேன் மக்கள் தாழலாம். ஆகவே மக்களை இரு சாரராகப் பிரிக்கலாம் அவற்றில் ஒரு பகுதியினரை பாவிகள் என்றும் வேறு பகுதியினரை ஞானிகள் என்றும் பெயர் என்று கூறுகிருர்களே அது சுத்தப் பொய்யான சொல் - பித்தலாட்டச் செயல் பெரிய ஆபத்துகள் ஏற்படும்போது - பெண்களே பேராபத்தில் சிக்கிக்

கொண்டு ஏக்கத்துடன் கூறுவதாய் இருக்கலாம் எந்த மனிதர்களை தெய்வச் சபையானது இழிகுணம் வாய்ந்தவர்கள் என்று கூறியதோ, அதே மனிதர்கள் ஒரு விழாவினைக் காண உற்சாகத்துடன் செல்வதைப் போல மரணத்தை நோக்கி நடந்து விடுகின்றனர். அப்படிப்பட்ட மனிதர்களால் தன்னலத் தியாகமும், பெருந்துணிச்சலும் நிறைந்த பல காரியங்கள் செய்யப்படுகின்றன. அவர்களைப் பல ஆயிரக்கணக்கான மக்கள் வியந்து பாராட்டுகின்றனர். அவர்களுக்காக, தன் கண்ணீரையே காணிக்கையாகச் செலுத்துகின்றனர்.

எல்லா மதங்களுக்குமேல் ஒரு பெரிய பொருள் இருக்கிறது; அதுதான் மக்கள் சமுதாயம். இந்த மக்கள் சமுதாயம் என்னும் விரிந்த கடலிலே செல்லும் கப்பல்களில் ஒன்று எப்போதாகிலும் கரையிலோ, கற்பாறையிலோ மோதுவதும் உண்டு! அதே சமயத்தில் அனல் கக்கும், பாம்புகள் சீறலாம் அப்போதுதான் ஒரு விரிந்த மனம்படைத்த ஓர் உயிர் நட்சத்திரம்போல் பிரகாசமுடைய ஒரு வீரம் நிறைந்த செயலைச் செய்து விட்டு மறையும் அந்த நேரத்தில் தான் மூடக் கொள்கைகள் முறிந்துவிடும். மக்கள் சமுதாயத்தின் உரிமைகளைப் பாழ்படுத்தி - இழிவுபடுத்தி - அடிமைப்படுத்தி வந்தது இந்தப் பயங்கரமான மூடக் கொள்கைகள்; இதனை, நாம் மறந்துவிடுதல் கூடாது.

மனித இதயத்திலிருந்து உரிமையை நியாய புத்தியை - பிரித்து எடுத்து விடும் மதங்கள் அவற்றின் கொள்கைகள் - கோட்பாடுகள் - நூல்கள் - உருவங்கள் இவைகளைப் பாதுகாக்க நிற்கும் சட்டங்கள் இவைகளைத் தூக்கித் தூரப்போடுங்கள். சிந்திக்காதே! அது பெரிய ஆபத்தான காரியம் என்ற அபிப்பிராயம் எந்த மூலையில் எந்த வடிவில் உங்கள் முன் வந்தாலும் அடித்து நசுக்குங்கள்.

ஒரு மனிதன் மற்ருெரு மனிதனின் உரிமைப் பொருளாக இருக்க முடியும் என்ற களங்கம் நிறைந்த கொள்கையை அழியுங்கள்; மனதிற்கு விலங்கு போடும் முயற்சியை நாம் அனைவரும் ஒரு குரல் கொடுத்துக் கண்டிக்க வேண்டும். கடவுள் இல்லை என்பதால் பணியாதே! பல்லிளிக்காதே! பாதகர்களுக்குப் பரிந்து பேசாதே! மிருகத்தைப் போல் ஊர்ந்து செல்லும் புத்தியை கொலை செய்! நிமிர்ந்து நட! கடவுள் இருப்பது உண்மையானல் இந்த பரந்த நில உலகத்தில் அடிமைகள் இருக்கவே கூடாதே?

---

# 2

பெண்கள் வெறும் அடிமைகள் அல்ல ; அடிமைகளுக்கு அடிமைகள்—அவர்கள் இந்தக் கீழ்த்தரமான அடிமைத்தனத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து கொண்டே வந்தது திருமணம் என்ற பெயரால் ஒருவனை மணக்கும் உரிமையைப் பெற எத்தனையோ லட்சக்கணக்கான ஆண்டுகள் பிடித்திருக்க வேண்டும் என்பது என் கருத்து. மனித வர்க்கத்தின் புனிதமான விழா—உயர்ந்த சடங்கு திருமணம்தான் என்பதை நான் தெளிவு படுத்தி சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன்,

சமயலறையின்றி மக்கள் முன்னேற்றம் இல்லை. குடும்பச் சுற்றமின்றி வாழ்க்கையும் பிரயோசனப்பட்டதாகாது. பல நல்ல குடும்பங்கள் சேர்ந்ததுதான் ஒரு நல்ல அரசாங்கம். அப்படிப்பட்ட நல்ல அரசாங்கத்தில் கிளையாய் யிருப்பது குடும்பம்.

இந்த நல்ல குடும்பங்களைச் சீரழிக்கச் செய்வது கேடுவிளைப்பது போன்ற முயற்சிகள் பேய்த்தன்மை வாய்ந்தது. களங்கமுடையது.

திருமண வழக்கம் என்பது எனக்கு நன்றாகப் பிடித்திருக்கிறது. இந்த நல்ல திருமணச் சடங்கை—அந்தப்புனித நிலையத்தை—கேலி செய்பவர்கள்—கிண்டல் செய்கிறவர்கள் இன்னும் இருக்கின்றனர். அவர்கள்தான் நீண்ட முடியுள்ள ஆண்கள்; குறுகிய முடியுள்ள பெண்கள். இவர்கள் திருமணத்தைத் தூஷிக்கக் கூறும் காரணக் காரியங்களை நான் மிகவும் கேவலமாகக் கருதுகிறேன்.

மனிதனுக்கு உயர்ந்த ஆசை ஒன்று இருக்குமானால் அது உயர்ந்த நற்பண்புகள் நிறைந்த பெண்ணின் காத

லைப் பெறக்கூடிய அளவுக்கு, தங்கள் இதயத்தை விலாசப் படுத்திக் கொண்டும், அறிவை வளர்த்துக் கொண்டும் வாழவேண்டும் என்பதுதான். அதைப்போலவே ஒரு பெண்ணும் ஒரு ஆணின் அன்பையும் மதிப்பையும் உள்ளத்தால் பெற்று வாழவேண்டும் என்பதுதான். இதைத்தான் என் அபிப்பிராயம் என்று கூற விரும்புகிறேன்.

காதல் இல்லை என்றால், திருமணம் என்ற சொல்லும், அந்தச் சடங்கும் இல்லையென்றால் வாழ்விலே வெற்றி என்பதையே பெறமுடியாது! ஆகவே 'உலகைக் கட்டியாளும் ஓர் உயர்ந்த அரசனாக இருப்பதைக் காட்டிலும்—நீ—ஆண்மகனாகிய நீ—ஒரு பெண்ணின் மேன்மையான, அன்பு நிறைந்த உள்ளத்தின் சக்ரவர்த்தியாக யிருப்பது மேல். அதைப் போலவே அந்தப் பெண்ணும் ஆண்மகனாகிய உன் இதயத்தாமரை என்னும், அரியணையில் வீற்றிருக்கும் பேரரசியாக இருப்பதுதான் உயர்ந்ததாகும் என்று நான் கூறுவேன்,

ஒரு நல்ல பெண்ணின் முழு அன்பையும் ஒருவன் பெற்றுவிட்டால் அவன் சாக்கடை யோரங்களில் பிச்சைக்கார வாழ்வு நடத்தி இறந்துவிட்டாலும் அவன் வாழ்க்கையில் வெற்றி அடைந்தவன் என்றுதான் கூறுவேன்.

பெண்களின் அடிமை விலங்குகள் அறுபட்டு, திருமணம் செய்து கொள்ளும் நிலைமைவர பலநூறாயிரம் ஆண்டுகள் பிடித்திருக்கும் என்று கூறினேன், சகோதரிகளே! உங்கள் உடல்கள் மீது அழகு செய்து கொண்டிருக்கும் ஆபரணங்கள், தாய்மார்களின் அன்புத்தளைகளாகும், உங்கள் கழுத்தைச் சுற்றிக்கொண்டிருக்கும் ஆபரணங்களும், அன்புக்கைகளால் அணிவிக்கப்பெற்ற காப்புகளும் நாகரீகம் என்னும் மந்திரக் கோலால் இரும்பிலிருந்து ஒளி மயமான தங்கமாக மாறியிருக்கின்றன.

இன்று வரை உலகில் தோன்றியுள்ள ஒவ்வொரு மதமும், உலகில் காணக்கிடைக்கும் எல்லா பேய்க் குணங்களுக்கும் பெண்களாகிய நீங்கள் செய்கிற குற்றம் தான் காரணம் என்று கூறியிருக்கிறது. எவ்வளவு வீரத்தனமான விஷயம் இது! இவ்விதம் கூறுவது உண்மையாயிருக்கு மென்றால் நான் துன்பம் நிறைந்த உலகில்தான் வசிப்பேன். என்றால் நேசிக்கப்படும் ஒரு பெண்ணுடன் தான் வாழ்வேனே அன்றி—வெறும் ஆண்களால் அலங்கரிக்கப்படும் தெய்வலோகத்தில் நான் ஒரு நாள் கூட வசிக்க விரும்பமாட்டேன்.

நான் ஒரு நூலைப்படித்தேன். படித்ததை அப்படியே உங்களிடம் ஒப்பிக்க முடியா விட்டாலும் அதன் கருத்தை உங்களுக்கு தெரிவிக்கிறேன் :—

இறைவன் ஒன்றுமில்லாத வெளியில் சூன்யத்தில் இருந்து இந்த உலகைப் படைத்தாரும் பினனர் ஒரு மனிதனை உண்டாக்கி ஒரு தோட்டத்தில் அவனை விட்டு வைத்தார். கொஞ்சம் நேரம் கழிந்ததும் "நாம் தனியாக வன்றோ இருக்கிறோம், துணைக்கு எவரும் இல்லையே" என்று தன் தனிமையை உணர்ந்தானும், அவனால் உட்கார முடியவில்லை. இப்படியும் அப்படியும் உலாவிக் கொண்டிருந்தான், அவனுக்குப் பிடித்தமான பொருள்கள் எதுவும் அங்கு கிடைக்கவில்லை. செய்திகள் இல்லாத இடம்; பத்திரிகைகள் கிடைக்காத இடம்; அரசியல் அமைப்பும்; கொள்கை போராட்டங்களும் அற்ற இடம்மல்லவா அது? ஆகவே அவன் தனிமையாக இருக்க முடியாமல் தவித்தான். சாத்தான் தோன்றாத காலம் அது! சாத்தான் இருந்தாலும் அதனோடு சமரசம் பேசி இருப்பான். அதுவும் முடியவில்லை, அவனால். தொழில் புரட்சி செய்ய முடியாதகாலம். என்ன செய்வான்? அந்தத் தோட்டத்தைச் சுற்றி சுற்றி வந்தான். கடவுள் பார்த்தார்: கருணை கொண்டார்; இவனுக்கு ஒரு துணையைத் தேடித்தர வேண்டும் என்று திருவுளம் பற்றினார்; உடனே அவனைத் தூங்

ரும்படி செய்தார்; அவன் தூங்கினன். அப்போது அவனுடைய விலா எலும்பு ஒன்றை எடுத்து அதிலிருந்து ஒரு பெண்ணைப்படைத்தார். சகோதரிகளே! மத்தியில் ஒரு வார்த்தை இந்தக் கதையை நான் நம்புவதாக நீங்கள் கருதக்கூடாது இவ்விதம் ஒரு பெண்ணை படைத்து, அந்த மனிதனிடத்தில் அனுப்பி வைத்தார். ஏன் தெரியுமா? அந்தப் பெண், அந்த ஆணை எப்படி விரும்புகிருன் என்பதைப் பார்பதற்கல்ல, இந்த ஆண் மகன் இந்தப் பெண்ணை எப்படி விரும்புகிருன் என்பதைப் பார்ப்பதற்காக!

அந்த மனிதன் அவளைக் கண்டான்; விரும்பினன் இருவரும இல்லறம் நடத்தினர்கள். அவர்களுக்கு ஒரே ஒரு காரியத்தைத்தவிர மற்றவை யெல்லாம் செய்யலாம என்று கூறப்பட்டது. ஆனல் அவர்கள் எதைச் செய்ய வேண்டாம் என்று எச்சரிக்கப்பட்டார்களோ, அதைச் செய்தனர். அவர்கள் மாத்திரமல்ல. நானும் அப்படியேதான் செய்திருப்பேன். அன்றிலிருந்து அவர்கள் வசித்தத் தோட்டத்தில் ஒரு ஆப்பிள் பழம் கூட இல்லை. உடனே அவர்கள் தோட்டத்தை விட்டு அப்புறப்படுத்தப்பட்டார்கள் மறுபடியும் தோட்டத்திற்குள் அவர்கள் நுழையாத வண்ணம் பாதுகாப்புகள் இருந்தன. அவ்வளவுதான் உலகில் பேய்த்தன்மை பரவ ஆரம்பித்து விட்டது, அம்மை, கக்குவாய், இருமல், ஜுரம் முதலியவைகள் ஒன்றின்பின் ஒன்ருய், படையெடுத்தன. மனிதன் பல்வலியால் கஷ்டப்படுகிருன். ரோஜா மலர்களுக்கு முள்ளும், பாம்புகளுக்கு விஷமும் உண்டாயின மத பேதங்களும் தலைத்தூக்கின அதுமுதல் இன்று வரையில் உலகில் தொந்தரவு ஏற்பட்ட வண்ணமாயிருக்கின்றன.

எப்படி கதை? சகோதரிகளே! ஏன் எழுதப்பட்டது இக்கதை? உலகம் துன்பங்கள் நிறைந்தது என்பதை நிருபிக்க, எல்லா மதங்களும் இப்படிப்பட்ட கட்டுக் கதைகளைக் கட்டி விட்டிருக்கின்றன.

இதே கதையை வேறொரு நூலிலும் படித்த துண்டு. அது நான் முன் சொன்ன புத்தகம் வெளி யாவதற்கு முன், அதாவது நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதாம், பின்னால் வெளியான நூல் அசல் என்றும் முன்னால் வெளியான நூல் நகல் என் றும், இந்த நூல்களுக்கு விளக்கங்கள் தந்த விரிவுரை ஆசிரியர்கள் அனைவரும் கூறுகிறார்கள். நாலாயிர — ஐயாயிர ஆண்டுகளின் மாற்றத்தை நீங்கள் மதிக்க வேண் டாம். அதனால் உங்கள் மதக்கோட் பாடுகளைப்பற்றி கவலையும் கொள்ள ;வேண்டாம் என்று கேட்டுக்கொள் ளுகிறேன். இந்த இரண்டாம் புத்தகத்தின் கதைப் படி ;—

சிருஷ்டி கர்த்தன், இவ்வுலகையும் ஓர் ஆணையும்:- பெண்ணையும் சிருஷ்டிக்க கருதினான். அவன் சிருஷ்டி யின் காரணமாக ஓர் ஆணும் ஒரு பெண்ணும் தோன் றினர். அந்த இருவரையும் ஒரு நீர் சூழ்ந்த நிலத் தில் கொண்டு போய்விட்டார். அளவு கடந்த அழகும் வளமும் பொருந்திய அற்புதமானது, அந்தத் தீவு. அங்கே பறவைகள் அழகாகப் பறந்து கொண்டும், பாடி மகிழ்ந்து கொண்டும் இருந்தன. பூக்களின் அழகே அலாதியான இன்பம் பயக்கும் அழகான வர்ணங்களும் அங்கு நிரம்பியிருந்தன. அங்கு இருந்த மரம் செடிகளின் மீது காற்று வீசினால், இனிய இசை ஒலிபோல் கேட் கும். இந்த விதமான அழகுகளை அந்தத் தீவுக்குத் தந்து விட்டபிறகு சிருஷ்டி கார்த்தா மேல்வருமாறு கூறுகிறார்; 'ஆண் மகனான இவனும்,பெண்ணாகிய இவளும், ஒருவர் மீது ஒருவர் காதல் கொள்ளட்டும். ஏனென்றால இருவ ரும் மணம் செய்து கொள்ளும் முன்னர் இவர்கள் இரு வருக்கும் உண்மையான அன்பு தழைத்து ஓங்க வேண் டும், என்பது என் விருப்பம்.''

அதன் பிறகு அவர்கள் காதல் கொண்டனர். பற வைகள் இன்னிசை முழக்கின; விண் மீன்கள் பிரகா சித்தன; மலர்கள் இதழ் விரித்தன; இந்தக் காதலை

நீங்கள் சிறிது கற்பனை செய்து பாருங்கள், அங்கே மிரட்டும் மாமனர் மாமியார்கள் கிடையாது. அண்டை அயலார்களின் வம்புப் பேச்சு கிடையாது 'இளைஞனே! எப்படியப்பா காப்பாற்றப் போகிருய் உன் காதலியை' என்ற கேள்வி கேட்போர் கிடையாது. எந்த உபத்திர வங்களும் இல்லை. யார் சட்டமும் செல்லாத இடம், அது. பின்னர் சிருஷ்டி கர்த்தா இந்த இருவருக்கும் திருமணம் நிகழ்த்தி வைத்தார். பின்னர் "நீங்கள் இங் கேயே இருங்கள். இந்தத் தீவை விட்டு எங்கும்போக வேண்டாம்," என்று கட்டளையிட்டார்.

கொஞ்ச நாள்வரையில் அந்த இளங் காதலர்கள் அங்கேயே வசித்து வந்தார்கள். பின்னர் ஒருநாள் அந்த ஆண் மகன் அவன் பெயர் ஆதாம் தன் காதலியான அந்தப் பெண்ணை—அவள் பெயர் ஏவாள்—பார்த்து "கண்ணே! நான் சற்று வெளியில் போய் வருகிறேன்" என்முன். அதன்படியே அவன் அந்தத் தீவின் வட பாகத்திற்குச் சென்முன். அங்கே ஒரு சிறிய நிலப் பரப்பு அவன் கண்களுக்குப் பட்டது. அது செழுமை உள்ளது என்றும் நினைத்தான். உடனே அவன் ஓடோ டியும் வந்து தன் காதலியை அழைத்து "நாம் அதோ தெரிகிறதே அந்த அழகிய நாட்டிற்குச் செல்வோம். இந்த நாட்டைவிட அது அதிகச் செழுமை உடை யது" என்முன். அவள் இணங்கவில்லை, முதலில். பின் னர் தன் கணவன் மொழியினைத் தட்ட மனமின்றி அவன் பின் நடந்தாள்.

இருவரும் அந்த நிலப் பரப்பைக் கடந்தனர். அவர்கள் நோக்கிச் செல்லும் இடம் நாடல்ல. கடல். ஆதாம் கண்களுக்குச் செழிப்புள்ள நாடுபோல் தெரிந் தது. பாவம்! இருவரும் அந்தச் சமுத்திரத்தில் மூழ்கி விட்டனர். உடனே சிருட்டி கர்த்தா இவர்கள் செய் கையைப் பார்த்து வெகுண்டார். "இந்தா சாபம்! பிடி இதை! உங்களுக்குக் கேவலமான நரகம் கிடைப்ப தாக" என்று சபித்தார்.

அப்போது ஆதாம் என்னும் அந்த மனிதன் "சிருட்டி கர்த்தரே! என்னைச் சபியுங்கள், என் காதலி குற்றமற்றவள். அவளைச் 'சபிக்க வேண்டாம் நான் தான் குற்றவாளி" என்று கூறினன். அந்த மனிதனை நான் பாராட்டுகிறேன். அப்படிப்பட்ட மனிதனை முதலாக வைத்துத்தான் உலகம் தோன்றியது.

பின்னர் சிருட்டி கர்த்தர் அந்த மனிதனைப் பார்த்து "ஏவாளை காப்பாற்றுவேனே தவிர உன்னை காப்பாற்ற மாட்டேன்" என்ருர்.

உடனே ஏவாள் கர்த்தரைப் பார்த்து, "அவரை—ஆம் என் கணவரைக் காப்பாற்ருமல், என்னை மாத்திரம் நீங்கள் காப்பாற்ற வேண்டாம். அவரை யிழந்து விட நான் விரும்பவில்லை. மனப்பூர்வமாக அவரை நேசிக்கிறேன்" என்ருள்.

உடனே சிருட்டி கர்த்தர் மனமிரங்கி, சந்தோஷப் பட்டு, உங்கள் இருவரையும் சபிக்கவில்லை. இனி உங்களையும், உங்கள் சந்ததிகளையும் நான் காப்பாற்றி வருவேன்" என்ருர்.

இவர்கள் "ஹீதன்கள்" என்று சொல்லப்படும் புறச் சமயத்தார் இவர்களிடம் எவ்வளவோ உயர்ந்த கருத்துக்கள் இருந்த தென்று இந்நூல் கூறுகிறது. இதிலிருந்து சில எடுத்துக் காட்டுகளை நான் கூறுகிறேன். இந்தப் புறச் சமயவாதிகளை, கிருத்துவ மதத்திற்கு மாற்ற நாம் வெளி நாடுகளுக்குப் பாதிரிகளை அனுப்புகிறோம். நம் அருகிலிருப்பவர்களை நாம் மாற்றினேமா? இல்லை. ஏன்? அது போகட்டும் நாம் யாரை மதம் மாறவேண்டும் என்று கூறுகிருேமோ, அவர்களின் ஏடுகளில் என்ன கூறி இருக்கிறது என்று பாருங்கள்.

"ஆண்—பலம்; பெண்—அழகு. பெண்—அன்பு; ஆண்—வீரம். ஒரு பெண்ணையும், ஓர் ஆணையும் உள மாற நேசிக்கிற குடும்பத்தில், தேவதைகள் எல்லாம்

தெய்வலோகத்தை விட்டு, அந்தக் குடும்பங்களில் தங்கி, இன்ப இசைகளைப் பாடி மகிழ்வார்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட உயர்ந்த-சிறந்த கருத்துக்கள் நிறைந்த இனத்தவர்களை நாம் மாற்றப் பார்க்கிறோம். இது சரியா? நினைத்துப் பாருங்கள்.

அன்பு என்பது ஒரு நாட்டுக்கே உரிய சொந்த சொத்தா? பெருந் தன்மை என்பது ஒரு இனத்தின் ஏகபோக உரிமையா? அன்பு உள்ளவர்கள்—கருணை நிறைந்தவர்கள் ஒவ்வொரு காலத்திலும் எல்லா நாடுகளிலும் தோன்றி யிருக்கிறார்கள்.

ஆணுக்கு எந்த விதத்திலும் தாழ்ந்தவள் அல்ல பெண். பெண் ஆணுக்குச் சமம். ஆண் பெண்ணுக்குச் சமம். இது என எண்ணம். ஆண் மகனாகிய நான் என் சகல உரிமைகளையும் அவளுக்குத் தருகிறேன், இன்னும் இதைவிட அருமையான ஓர் உரிமையும் அவளுக்கு உண்டு. அதாவது ஆண்களால் காப்பாற்றப் பட வேண்டிய உரிமையும் அவளுக்கு உண்டு. இது தான் என் கொள்கை.

நீங்கள் திருமணம் செய்து கொண்டீர்களா? செய்து கொண்டிருந்தால் உங்கள் மனைவியைச் சந்தோஷமாக வைத்துக் கொண்டிருங்கள், தன் சொந்த நலம் கருதி எவன் மணம் செய்து கொள்கிறானோ அவன் தவறு செய்தவனாகிறான். எவன் "நான் மணந்த என் காதலியைச் சந்தோஷப் படுத்துவேன்" என்று சொல்லி, திருமணம் செய்து கொள்கிறானோ அவன் சரியான காரியத்தைச் செய்தவனாகிறான்.

இன்பம் அனுபவிக்க நீ விரும்பினால் பிறர் இன்பம் அடைய வழி செய்! குறுக்கு வழியும்—கோணல் நடத்தையும் கடைபிடிப்பதால் நீ இன்பம் துய்க்க முடியாது. மற்றவர்களையும் அணைத்துக் கொண்டு தான் செல்ல வேண்டும்.

எவனொருவன் தன்னைத் தன் குடும்பத்திற்குத் தலைவன்—எஜமானன்—நான் தான் சர்வாதிகாரி என்று நினைக்கிறானோ அவனை நான் அடியோடு வெறுக்கிறேன். இருஇளம் காதலர்கள், பால் நிலவு பட்டம் பகல் போல் பிரகாசிக்க—தன் மனைவியின் கொஞ்சு மொழிகளைக் கேட்டு, ரசித்த வண்ணம் நடக்க, - அதுபோது பறவைகளின் இன்னிசை கேட்க — இன்பலோகம் நோக்கி செல்லும்போது அவர்கள் ஓர் இடத்தில் திடீரென்று நின்று "நம் இருவரில் யார் எஜமான் — தலைவன்—என்பதை இந்த இடத்திலேயே — இப்போதே முடிவு கட்டியாக வேண்டும்" என்ற பேச்சுகளைத் துவக்கினால் அது எங்கே கொண்டுபோய் விடும்? எவ்வளவு கேவலமாயிருக்கும்? அந்த எண்ணமே எவ்வளவு இழிவானது?.

"இது என் குடும்பம். இதனை நான் ஆள்கிறேன்" என்று கூறும் மனிதனை "நான்தான் பேசுவேன். மற்றவர்கள் வாயசைக்கக் கூடாது? என் சொல்லை கேட்டுக் கொண்டு மௌனம் சாதிக்க வேண்டும்" என்று கட்டளையிடுகிற மனிதனை "நான்தான் எஜமான் - என் சொல்லே சட்டம்" என்று கூறும் மனிதனை நான் வெறுக்கிறேன். வாய்விட்டு சொல்ல முடியாத அளவு வெறுப்பு ஏற்படுகிறது, அவன்மீது.

சிடுசிடுத்த முகத்தைத் திருமுகமெனக் கருதும் மனிதனை நான் வெறுக்கிறேன். சூரிய ஒளியைக் கொலை செய்ய என்ன உரிமை பெற்றிருக்கிறான் அவன்? வாழ்வின் சந்தோஷத்தைக் கொலை செய்யும் உரிமையை யார் கொடுத்தது அவனிடம்? வீட்டிற்குப் போகும் போது ஒளிமிகுந்த முகத்துடன் போ. நீ கொண்டு செல்லும் ஒளியானது இரவின் இருளில் கூட சன்னல்களையும் - வாயில்களையும் தாண்டிச் சென்று இருள் போக்கி, ஒளி எழ, வழி செய்ய வேண்டும். அதை விட்டு விட்டு ஒரு சிலர் வீட்டில் நுழையும் போதே "என் மூளை குழம்பிக் கிடக்கிறது. என்ன செய்வது?" என்று

கூறிக்கொண்டு பெரிய பாரம் ஒன்றை தலையில் சுமந்து வந்தவர் போல, அவதியுடன் உளறுகிறார்கள்.

வேறு சிலர் ஐந்தாவது வட்டத்திற்கு யாரை 'ஆல்டர்மென்' ஆகத் தேர்ந்தெடுப்பது என்று நினைத்துக்கொண்டே வருகிறார்கள். இன்னும் சிலர் அரசியல் ஆலோசனைகளைத் தலையில் தாங்கிய வண்ணம் ஆஜரா கின்றனர். மற்றும் சிலர் ஐந்து அல்லது ஆறு காசுகள் தந்து வாங்கிய துணியை எப்படி ஏழு காசுகளுக்கு விற்பது என்ற எண்ணத்தைச் சுமந்து கொண்டு வருகிறார்கள். இப்படிப்பட்ட எத்தனையோ விதமான அறிவுச் சோர்வுகள் ஏற்படும் மக்களுக்கு, இவர்கள் வீட்டினுள் நுழைந்தவுடன் தன் வீட்டிலுள்ள அத்தனைப் பேரும் தன் சுகத்தைக் கவனிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். வீட்டில் குழந்தைகள் ஐந்தாறு; அவைகளில் ஒன்றிரண்டிற்கு நோய் வேறு; இவைகளுக்கு உணவு ஊட்டி - விளையாட்டுக் காட்டி - அழும்போது தேற்றி - பாட்டுத் தேவைப்பட்டபோது பாடிக்காட்டி - திருப்தி செய்யவேண்டி யிருக்கிறது. இத்துடன் ஒரு கஜம் துணியை எப்படி உபயோகித்தால் நீண்ட நாள் உபயோகிக்க முடியும் என்று யோசிக்க வேண்டியிருக்கிறது. இவ்வளவு காரியங்களைச் செய்கிற ஒரு பெண், முகம் கோணமல் சோர்வை மறைத்துக்கொண்டு இன்முகம் காட்டி இந்த பெரிய மனிதன் இருக்கிறானே—குடும்ப எஜமானன்—அவள் தலைவன்—அவனுக்குத் தொண்டுகள் புரியவேண்டி யிருக்கிறது.

மற்றொரு விஷயத்தை உங்களுக்கு விளக்க நான் விரும்புகிறேன். கைநீளாத கருமிகளை நான் வெறுக்கிறேன். ஐந்து அல்லது பத்துக்கோடி டாலர்களை வைத்துக் கொண்டிருக்கும் ஒரு பெரிய பணக்காரன் ஒருவன், தனக்கு வேண்டிய சகலவசதிகளும் நிரம்பிக் கிடக்கும் ஒரு நகரத்தில்—பணக்காரர் வாழும் நகரம் அல்ல; ஏழைகளால் நிறப்பப் பெற்ற நகரத்தில்—வாழ்ந்து கொண்டிருக்கிறான். நாள்தோறும் ஏழை

களின் சோர்ந்து போன முகங்களைக் காண்கிறான். பஞ்சத்தால் வெளுத்துப்போன உதடுகளைப் பார்க்கிறான். ஆனால் மனம் இரங்க வில்லை. அவர்களைத் தினம் தினம் பார்க்கிறானே! அவனால் எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடிகிறது என்பது எனக்குத் தெரிய வில்லை! இந்தக் கோரக்காட்சிகளைக் கண்டு எப்படிச் சகித்துக் கொள்கிறான்? தன் ஆசையின் அணைப்பில் எவ்விதம் பல கோடிக்கணக்கான டாலர்களை அடக்கி வைத்துக்கொண்டு ஏழைகள் படும் பாட்டையும் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க முடியும் என்பது என் சிந்தனைக்கு எட்டாத விஷயமாகவே இருக்கிறது! பல ஆயிரக்கணக்கான மக்கள் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கும் நேரத்தில், அதைப் பார்த்துவிட்டு, அதைப்பற்றி சற்றும் கவலை கொள்ளாமல், அந்தக் கடல் ஓரத்திலிருக்கும தட்டுமுட்டுச் சாமான்களை அடுக்கி வைத்துக் கொண்டிருக்கும் ஒருவனுடைய செய்கைக்கும், இந்த இரக்கமற்ற பணக்கார பாவிக்கும் என்னால் வித்தியாசம் காண முடியவில்லை.

இவர்களை விட இன்னும் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் பண விஷயத்தில் தன் மனைவிமார்களிடத்திலும் மனதைத் திறக்க மாட்டார்கள். தன்னுடைய இருதயத்தையும்—கண்ணியத்தையும் தன் மனைவிமார்களிடம் ஒப்படைப்பார்கள் ஆனால் தங்களின் வரவு செலவு கணக்குப் புத்தகத்தையோ, அல்லது ஒரு தங்க நாணயத்தையோ தர மாட்டார்கள். இவர்களை நான் காணும்போது இவர்களுக்கு எந்தப் பொருள் சிறந்தது என்பதைத் தெரிந்தவர்களாக இருக்கிறார்கள் என்று கருதுகிறேன். நான் அவர்களைப் பார்த்துக் கேட்கிறேன். உங்கள் மனைவி ஒரு ஏழைப் பிச்சைக்காரியைப் போல் உங்கள் முன் நின்று, நான் தோறும் உங்கள் எதிரில் பயபக்தி விசுவாசத்துடன், "ஒரு டாலர் கொடுங்கள். இரு டாலர் கொடுங்கள்" என்று கேட்பதை எண்ணிப் பாருங்கள்! அதே நேரத்தில் நீங்கள் புருவத்தை

நெரித்து "சென்ற வாரம் கொடுத்த ஒரு டாலர் எங்கே? என்ன செய்தாய்?" என்று நீங்கள் கேட்கிறபோது உங்கள் மனைவி உங்கள் எதிரில் குற்றவாளி கூண்டில் நிற்பது போல அடங்கி ஒடுங்கி, நடுங்கிநிற்பதை நினைத்துப் பாருங்கள். பிச்சைக்கார சுபாவமும், கோழைத்தனமும் நிறைந்த தாய் பெற்றெடுக்கும் குழந்தைகள் எப்படியிருக்கும் என்று நீங்களே நினைத்துப் பாருங்கள்!

இந்த உலகத்திலே, உங்கள் ஆஸ்தி முழுவதும் ஒரு டாலர்தானு? ஆம் என்றால் அதையும் செலவு செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டதா? அப்படியானல் அந்த ஒரு டாலரையும் ஒரு அரசனைப் போல் செலவு செய்யுங்கள். அதனை ஓர் உலர்ந்துபோன சருகு மாதிரி செலவிடுங்கள். அப்படிச் செலவிடும் போது நீங்கள் பல காடுகளுக்குச் சொந்தக்காரர் என்று எண்ணிக் கொண்டு செலவு செய்யுங்கள். இப்படித் தான் பணத்தைச் செலவு செய்ய வேண்டும்.

நான் ஒரு பிச்சைக்காரனுக இருந்து அரசனைப் போல என்னிடமுள்ள கடைசி நாணயத்தைச் செலவழிப்பேனே அன்றி, ஓர் அரசனுக இருந்துகொண்டு பிச்சைக்காரன் மாதிரி என் பணத்தைச் செலவழிக்க விரும்ப மாட்டேன். அந்தப் பணம் என் கையிலிருந்து போகவேண்டி யிருந்தால், அது தாராளமாகத்தான் போகட்டுமே! நீ எதைச் சிறந்தது என்று கருதுகிருயோ அதை உன் குடும்பத்தினருக்குக் கொண்டுபோய் கொடு. நீ எப்படி பார்வைக்கு அழகா இருக்க வேண்டும் என்று கருதுகிருயோ, அப்படியே உன் குடும்பத்தாரும் இருக்க ஆவன செய்! நீ திருமணம் செய்து கொண்ட போது உன் மனைவியின் மீது காதல் கொண்டா யல்லவா? அப்போது ஆ! உன் கண்கள் எவ்வளவு அழகாய் இருந்தது. உன் நடையிலே எவ்வளவு மிடுக்குத்தனம்—கம்பீரம்! அரசிளங் குமரனைபோலல்லவா தோற்ற மளித்தாய்? அப்படிப்பட்ட நீ, இன்று உன் உருமாறி, அழுக்கு உடை அணிந்திருந்தா

னும், 'என் மனைவி என்னை நேசிக்க வேண்டும்' என்று கருதுவாயானால் உன்னுடைய ஆணவம்தான் என்ன? இந்த உலகில் பிறந்த எந்தப் பெண்ணும், அவளுக்கு இதத்தைச் செய்தால், அவள் உன்னிடம் உண்மையாகவே நடந்து வருவாள். என்னிடம் "உங்கள் காதல் தத்துவம், மனைவிமார்கள் விஷயம் எல்லாம், பணக்காரர்களுக்குத் தான் ஏற்றதே ஒழிய ஏழைகளுக்கு உதவாது" என்று சிலர் கூறுகிறார்கள். நான் அவர்களுக்கு, பணக்காரர்களின் மாளிகைகளைவிட, ஏழைகளின் குடிசைகளில்தான் அதிகமான அன்பு இருக்கிறது என்று கூற விரும்புகிறேன்.

வெளிப்பார்வைக்குக் கேவலமாய் உள்ளதும், ஆனால் உட்புறத்திலே அன்பு நிறைந்ததுமான, ஒரு குடிசைதான், ஆண்டவன் குடியேறி வசிப்பதற்கு ஏற்றதொரு மாளிகை. அன்பே இல்லாத மாளிகை, காட்டு மிருகங்கள் வாழும் இருண்ட குகை. இதுதான் என் கருத்து.

ஒருவனுக்குக் கூட உதவி செய்ய முடியாத, அவ்வளவு பரம ஏழையாய் நீயிருக்க முடியாது. ஏன் அப்படி சொல்லுகிறேன் என்றால், இந்த உலகத்திலேயே மிகவும் மலிவாக வாங்க முடியும் சரக்கு நல்ல சுபாவம் தான். அன்பை வாங்குங்கள்! அது வாங்குபவனுக்கும், கொடுப்பவனுக்கும் ஒன்றுக்குப் பன் மடங்கு, அதிகமான லாபத்தை தரக்கூடியது. "நான் பணக்காரனாகவே இருக்க வேண்டியிருக்கிறது" என்று சொல்லாதே. அமெரிக்காவில் நாம் பெருந் தன்மைக்கு ஒரு பொய் மதிப்பு ஏற்படுத்தி வைத்திருக்கிறோம்.

ஒருவன் பெரிய மனிதனாகத் திகழ வேண்டுமென்றால், அவன் பெயர் விளம்பரப்படுத்தப் படவேண்டும். அல்லது பெரிய பணக்காரனாக இருக்க வேண்டும். அல்லது, அவன் பெயர் ஊரார் உரையாடலில், வம்பு மடங்களில் அடிபட வேண்டும் என்று நாம் கருதுகிறோம்.

இவ்விதம் தான் நாம் ஒரு பெரிய மனிதனை, அளந்து பார்க்கிறோம். இந்த முறையே தவறு. ஒருவன இன்ப மாகக் காலம் கழிப்பதற்கு அவன் பணக்காரனாக இருக்க வேண்டியதில்லை! பெரிய மனிதனாக இருக்க வேண்டியதில்லை! அதிகாரத்திற்கு அதிகாரியாயும் இருக்கத் தேவையில்லை! இன்ப மனுபவிக்கின்ற மனிதன் வெற்றி யுள்ளவன் என்று கூட நான் கருது கிறேன்.

ஆன்மாவின் சட்ட ரீதியான ஒரு காப்பாளன் தான், இன்பம். அந்த இன்பம்தான் ஒரு மனிதனுடைய ஆஸ்தி. சில நாட்களுக்கு முன் நெப்போலியனுடைய சமாதி முன் போய் நின்றேன். அந்தச் சமாதி இறந்து போன ஒரு கடவுளுக்குச் சமமாக எனக்குத் தோன்றியது. அந்தச் சமாதி பொன்னாலும், மெருகாலும், அலங்கரிக்கப்பட்டுத் திகழ்ந்தது. உயர்ந்த சலவைக ளால் மிக மிக அருமையாக அமைக்கப் பெற்றிருந்தது. அமைதியே குடிகொண்ட அந்தச் சமாதியில், தான் உயிருடன் வாழ்ந்தபோது ஒரு கண நேரமும் ஓய்வு கொள்ளாத அந்த மனிதன் நெப்போலியனுடைய சாம்பல் அடக்கம் செய்யப்பட்டிருப்பதைப் பார்த்தேன். அந்தச் சமாதி கட்டிடத்தில் சாய்ந்த வண்ணம், உலகில் மிகப் பெரிய போர் வீரனாகிய அவன் வாழ்நாளை நினைத்துப் பார்த்தேன். அப்போது என் மனக் கண் முன்:-

அவன்—ஆம் அந்த நெப்போலியன் காட்சியளிக்கிறான். ஸீன் நதி என் முன் தெரிந்தது. நெப்போலியன் அந்த நதிக்கரையில் உலவிக் கொண்டிருக்கிறான். எதையோ ஆழ்ந்து சிந்தித்த வண்ணம் இப்புறம் அப்புறமாக உலாவுகிறான். அவன் சிந்திப்பது எதைப்பற்றியும் இல்லை. தற்கொலை செய்து கொள்ளலாமா? வேண்டாமா?—என்பதை முடிவு கட்டத்தான். பின்னர் அந்தக் காட்சி மறைகிறது. டுலோன் நகரம் தெரிகிறது. அங்கும் அவன் இருப்பதைக் கண்டேன். பின்னர்

பாரீஸ் பட்டணம்: அதிலே மக்கள் கூட்டத்தை அடக்கும் பணியில் நெப்போலியன் முனைந்திருப்பதைப் பார்த்தேன். அதன் பிறகு இத்தாலிய சேனையின் தளபதி உருவில் காண்கிறேன். அவன் நடத்தும்போரும் தெரிகிறது. வேறொரு சமயம் மூன்று நிறங்களுடன் கூடிய கொடி தாங்கிய வண்ணம் 'லோடி' வாராவதியைக் கடக்கிறான். எகிப்து நாட்டு 'பிரமிட்' கோபுரத்தின் நிழலில் கண்டேன். ஆல்பஸ் மலையைக் கடந்து சென்று பிரான்சு நாட்டின் கொடியை நடுகிறான். பின்னர்:

"மரரேங்கே", "உல்ம்", "ஆஸ்ட் டேர்லிட்ஸ்" முதலிய நகரங்களில் அவனைக் காண்கிறேன். ரஷ்யாவில் அவனின் சேனைகள் உதிர்ந்த இலைகளைப் போல சிதறடிக்கப்படுகின்றன. பல ஆயிரக் கணக்கான சேனாவீரர்களால் துரத்தப்பட்டுப் பாரிஸ் பட்டணத்தை அடைகிறான். அவன் எல்பா என்ற தீவுக்கு நாடு கடத்தப்படுகிறான். ஆனால் அவன் தன்னுடைய திறமையால் தப்பி விடுகிறான். மீண்டும் ஓர் ஏகாதிபத்தியத்தை நிலை நிறுத்துகிறான். பின்னர் அந்தப் பயங்கரமான வாட்டர் லூ யுத்தத்திலே அவனைப் பார்க்கிறேன். கடைசியாக அவனைச் சேயிண்ட் ஹெலினா என்னும் தீவில் கண்டேன்! எப்படிக் கண்டேன் தெரியுமா? நெப்போலியனின் இரு கைகளும் பின்புறமாகக் கட்டியிருக்கிறது. அவன் முகத்தில் துக்க கோடுகள் தெரிகின்றன. அவன் நீல நிறக் கடலைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அதே சமயத்தில் என் மனக் கண்ணிலே வேறு பல காட்சிகளும் தோன்றாமலில்லை! அந்த நெப்போலியனால் எத்தனை பேர் அனாதையானார்கள்? எத்தனை தாய்மார்கள் தங்கள் கணவனை இழந்து விதவைகள் ஆயினர்? நெப்போலியன் கீர்த்தி பெற எவ்வளவு கண்ணீர் சிந்தப்பட்டது? அவனால் காதலிக்கப்பட்ட ஒருத்தி ஜோஸப்பைன் என்பவள் எப்படி அவமதிக்கப்பட்டாள்? இதுவும் என் நினைவிற்கு வந்தது. அப்போது, என் வாயிலிருந்து

'பலாத்காரமும் கொலையும் சேர்ந்து ஏகாதிபத்தியம் என்ற உருவெடுத்தது போல் நெப்போலியன் என்னும் அந்தப் பெரிய மனிதன் தோன்றினன். அந்தப் பெரிய மனிதனைக் காட்டிலும், கிழிந்துபோன மிதியடி அணிந்து கொண்டிருக்கும், ஒரு பிரஞ்சு குடியானவனு கவே, நான் இருக்க விரும்புகின்றேன். திராட்சைக் கொடிகள் படர்ந்திருக்கும் கூரைகளுடைய குடிசையில் நான், வாழப் பிரியப் படுகிறேன். தன் மனைவி நூல் நூற்றுக் கொண்டு பக்கத்திலே அமர, குழந்தைகள் அவளின் தாள்களிலும் தோள்களிலும் விளையாட, வாழ்வைச் சந்தோஷமாக நடத்துகிருனே, அவனைப் போல் இருக்கவே, நான் ஆசைப்படுகிறேன்! கனவு—நனவு அற்ற இடத்தில், புழுதி மண்ணின் அமைதியில், அடைக்கலம் புகுந்து கொள்ளவே நான் இச்சை கொள்கிறேன்' என்ற வாக்கியங்களைச் சொல்லிக் கொண்டேன்.

இன்பம் அனுபவிக்க, பெரிய மனிதன் என்ற பட்டம் பெறத் தேவையில்லை. நியாயத்தை நேசித்து, நேர்மையைத் துணைக் கழைத்து, தாராள சிந்தையுடன் கூடி, அன்பு நிறைந்த இதயத்தைப் பெற்று வாழ, ஒருவன் பணக்காரனுக இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. பணக்காரனுய் இருந்தாலும், அல்லது ஏழைக் குடியானவனுனுலும், உன்னுடைய மனைவியை ஒரு சிறந்த மலரைப் போல் பாராட்டு. அப்போதுதான், அவள் உன் வாழ்கையை, தன் மணத்தாலும், மகிழ்ச்சியாலும் நிரப்புவாள்.

ஒரு விஷயம் உங்களுக்குக் கவனமூட்ட விரும்புகிறேன். நீங்கள் எந்த பெண்ணை, இதய பூர்வமாக நேசிக்கிறீர்களோ, அவள் எப்போதும் உங்கள் கண்களுக்குக் குமரியாகவே காணப்படுவாள். அவளின் வயோதிகம், உங்கள் கண்களுக்குத் தெரியாது. காலம் அவள் முகத்தில் வயோதிக கோடுகளைப் போட்டுக்

காட்டலாம்; அவள் முகத்தில் திரைகளை நிரப்பிக் காட்டலாம், ஆனால், நீங்கள் அவளை உண்மையாய் நேசிப்பீர்களானல், உங்களால் முதலில் காதலிக்கப்பட்டவள், உங்கள் இதயத்தை கவர்ந்து கொண்ட அவள், எப்போதும், அப்படியே இருப்பாள்! இதைப் போலவே, ஒரு பெண்ணும் ஒரு ஆணை உண்மையாகவே நேசிப்பாளாயின், அவனுடைய வயோதிகம் அவள் கண்களுக்குத் தோன்றாது. அவன் நரம்பு தளர்ந்தவனாகவோ, கிழவனாகவோ, அவளின் பார்வைக்குத் தெரியமாட்டான்! அன்று தன் மலர்க் கரத்தைப் பிடித்த மாவீரனாகவே தெரிவான்.

காதல் நித்தியமானதல்லவா? இந்த உண்மையான காதலர்கள் இருவரும், வாழ்வு என்னும் மலையின் மீது ஏறுகிறார்கள். இறங்கும்போது, அதாவது வயோதிக காலத்தில், காலம் என்னும் மரத்தில் இலைகள் துளிர்க்காத கிளைகளின் மீது, இன்பமும், அன்பும் நிறைந்த பறவைகள் பாட்டிசைக்க தன் பேரப் பிள்ளைகளின் சிரிப் பொலியை மகிழ்ச்சியுடன் கேட்டு இன்புறுகின்றனர்.

அடுப்பங்கரையில் நம்பிக்கை யுள்ளவன் நான். வீட்டின் ஜனநாயக வாழ்விலே நம்பிக்கையுள்ளவன் நான், குடும்பத்தின் குடியரசு வாழ்விலே நம்பிக்கை யுடையவன் நான். சுதந்திரத்திலே நம்பிக்கை யுள்ளவன் நான், சமத்துவத்திலே நம்பிக்கை யுள்ளவன், நான். அன்பிலே-அதைச் சார்ந்த நல்ல நல்ல வகைகளிலே நம்பிக்கையுடையவன் நான்.

---

# 3

பெண்களே அடிமைகளுக்கு அடிமைகள் என்ருல் குழந்தைகளைப்பற்றி என்ன சொல்லப்போகிறேன். சந்துகளிலே திரிந்து, பொந்துகளிலே புகுந்து வாழ்கின்ற குழந்தைகள்—அப்பா வருகிருர் என்பதை அவர் மிதியடி சத்தம் கேட்டதும் தெரிந்துக்கொண்டு முகம் வெளுத்துப் போகும் குழந்தைகளைப்பற்றி தங்கள் தாய், பெயர் சொல்லி அழைத்தவுடனே ஓடி மறையும் குழந்தைகளைப்பற்றி — கொந்தளிப்புள்ள பைத்தியக்காரத்தனம் வாய்ந்த வாழ்க்கை கடல் ஊடே மிதக்க விடப்படுகிற குழந்தைகளைப் பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன்? என் உள்ளத்தை அப்படியே அவர்களுக்கு ஒப்படைத்து விடுகிறேன் அவ்வளவுதான்.

உங்களிடம் ஒன்று சொல்ல விரும்புகிறேன். உரிமைகள் நமக்குமட்டும் உரியதல்ல நம்மைப் போலவே குழந்தைகளுக்கும் உரிமை உண்டு. நாம் அவர்களையும் மனிதப்பிறவி என்று கருதியே நடத்த வேண்டும். அதை விட்டு விட்டு மிருகங்கள் மாதிரி நடத்துவது தகாது. அன்பாக அவர்களை நடத்த வேண்டும், இனிமையாக அவர்களிடம் பேச வேண்டும் இது தான் குழந்தைகளைப் பற்றிய எண்ணம்.

உங்கள் குழந்தைகள் பொய் சொல்லி விட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள்; அதனுல் இந்த உலகமே மூழ்கிவிட்டதாகக் கருதி, அந்த இளம் குழந்தையை நோக்கி ஓடாதீர்கள். குழந்தைகள் தான் இருந்தாலும் அதனிடம் கண்ணியத்துடன் நடந்துக் கொள்ளுங்கள். கொடுமை வாய்ந்த தன் குழந்தையை அதட்டி மிரட்டுகிறவனை, தந்தையாக உடைய குழந்தைகள், கட்டாயம்பொய் சொல்லுகிறவர்களாய்த்தான் இருப்பார்கள். இந்த உண்மை உங்களுக்குத் தெரி

யுமா? பொய்யின் பிறப்பிடம் எது என்பதை அறிவீர்களா? கொடூரமும், பலவீனமும், சேர்ந்து பெற்ற பிள்ளையின் பெயர் பொய் என்று தெரிந்துக் கொள்ளுங்கள்.

நீங்கள் கடுகடுத்த முகத்துடன் கையிலே ஒரு தடியை யேந்தி நீங்கள் பெற்ற சிறு குழந்தையை நாடி ஓடினீர் களானல் அந்தக் குழந்தை உங்களைக் கண்ட பின் எப்படி மெய் பேசும்? பொய்யைத்தானே சொல்லும்?

இயற்கை அன்னை குழந்தையின் மூளையில் ஒரு சக்தியை வைத்திருக்கிருள்; ஆம்! மிருகத்தனம் நிறைந்த பெற்ருேர்களால் தாக்கப்படும் போது அந்தக் குழந்தை பொய் என்னும் போர்வையில் தன்னை மறைத்துக் கொள்ளுகிறது.

பெற்ருேர்களே! உங்கள் குழந்தை உங்களிடம் பொய் வார்த்தை சொல்லிவிட்டால் அதனிடம் கோபப் படாதீர்கள். சாதரணமாகப் பேசுங்கள். 'குழந்தாய்! நான் கூட உன்னைப் போலவே நூற்றுக்கணக்கான பொய்களைப் பேசி யிருக்கிறேன்; ஆனல் அது நன்மை தரவில்லை. ஆகவே அப்படிப் பேசுவதால் பயன் இல்லை' என்று இனிய மொழிகளால் கூறுங்கள்.

உருவத்தில் உங்களைவிட பெரியவன்; உடற்கட்டும் உங்களைவிட சற்று அதிகம் உடையவன். கையிலே பெரிய தடியொன்றைத் தாங்கி, உங்கள் எதிரில் நின்று கொண்டு, "இதை உடைத்தது யார்?" என்று இடியோசையை நினைவு படுத்தும் குரலில் கேட்டால், அந்தப் பொருளை நீங்களே உடைத்து விட்டிருந்தாலும் என்ன சொல்வீர்கள், "நான் தான் உடைத்து விட்டேன்" அதற்கென்ன? என்ரு கூறுவீர்கள்? ஒருக்காலும் கூறமாட்டீர்கள். "நான் பார்க்கவில்லை, எனக்குத் தெரியாது" யென்றுதான் சொல்லுவீர்கள்.

ஒரு வியாபாரி தன் மகன் வீண்வதந்திகளைக் கிளப்பிவிட்டான் என்று சொல்லி அவனைச் சவுக்கால் அடித்தால் எப்படியிருக்கும் என்று யோசியுங்கள். ஒரு

வழக்கறிஞன், தன் குழந்தைகள் உண்மையை மறைத்துப் பேசுகின்றனர் என்று கூறி அவர்களை அடித்தால் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். உண்மையை மறைத்துப் பேசியே பணம் தேடுபவன்—வக்கீல் இதை அவன் நினைக்க வேண்டாமா? ஒரு மந்திரி தான் மனதில் நினைத்திருப்பதை எல்லாம் தன் குழந்தைகள் கூறவில்லை என்பதற்காக அவைகளை அடித்தால் எப்படியிருக்கும் என்று ஆலோசனை செய்து பாருங்கள்.

நீங்கள் பெற்ற உங்கள் குழந்தைகள் ஒரு குற்றம் செய்து விட்டால், உடனே அதனைக் கையிலெடுத்து அணைத்துக் கொள்ளுங்கள். உச்சி மோந்து ஒரு முத்த மிடுங்கள். உங்கள் இதயத்தோடு அந்தக் குழந்தையின் இதயமும் சேர்ந்து அடிப்பதாக நினைக்கட்டும். நீங்கள் அந்தக் குழந்தையை உண்மையாகவும் மனப்பூர்வமாகவும் நேசிக்கின்றீர்கள் என்று அது உணரட்டும். கிருத்துவ மதத்தை அனுட்டிக்கின்ற சிலர் அவர்கள் நல்லவர்கள்தான் தங்கள் குழந்தைகளில் ஒன்று தவறான காரியங்களைச் செய்து விட்டால் உடனே அந்தக் குழந்தையை நோக்கி' "மறுபடியும் இந்த வீட்டுக்குள் நுழைந்து இந்தப் புனிதமான இடத்தைக் களங்கப் படுத்தாதே என்று கூறி வீட்டைவிட்டே விரட்டி அடிக்கின்றனர். இதைப்பற்றி நீங்கள் சற்று சிந்திக்க வேண்டும். வீட்டைவிட்டு விரட்டியபின் அவர்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா? எந்தக் குழந்தை தவறு செய்தது என்று கருதி வீட்டைவிட்டு துரத்துகிறார்களோ அந்தக் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்று கர்த்தர் முன்னின்று "கடவுளே என் கண்மணியை அனுப்பிவிட்டேன், வீட்டைவிட்டு தாங்கள்தான் காப்பாற்ற வேண்டும். அவன் உனக்கே அடைக்கலம்" என்று மண்டியிட்டு வேண்டுகின்றனர். தோழர்களே நான் குழந்தையைக் காப்பாற்றும் பொறுப்பை ஒழுங்காக நிறைவேற்றாதவரை, கட

வுளை நோக்கி "ஏ, கடவுளே! என் குழந்தையை காப் பாற்று" என்று கேட்க மாட்டேன் மட்டியிட்டு கெஞ்ச மாட்டேன் வேறு என்ன செய்வேன் என்பதைச் சொல் கிறேன்.

"நீங்கள் உங்கள் விருப்பப்படி எங்கே வேண்டு மானாலும் போங்கள்; எந்தவிதமான குற்றத்தை வேண்டுமானாலும் செய்யுங்கள். எவ்வளவு கீழான நிலை மைக்கு வேண்டுமானாலும் போங்கள், தப்புக் காரியங் களைத் தாராளமாகச் செய்யுங்கள். இதைவிட எதைச் செய்தாலும் என் வீட்டுக் கதவுகள் உங்களுக்காகத் திறந்து வைக்கப்படும்—உங்களை வாரி அணைக்க என் இருகரங்களும் விரிந்திருக்கும் இதய பீடமும் உங்களை ஏற்றுக்கொள்ள காத்திருக்கும். என் உயிர் உள்ளவரை யில் உங்களுடைய உண்மையான தோழனாக, நான் ஒரு வன் இருப்பேன்.

கிருத்துநாதர் கூறினார், "சிறிய குழந்தைகளை என் னிடம் அழைத்துவாருங்கள் அப்படிப்பட்டதுதான் மோட்சவீடு" என்று, ஆனால் அவர் அப்படி கூறியபோது தன் உடையின்கீழ் ஒரு சாட்டையை மறைத்து வைத் துக்கொண் டிருந்தா ரென்றும், குழந்தைகளை அடிப்ப தற்காகவே அவர் அப்படி அழைத்தார் என்றும் ஒரு சிலர் நினைக்கின்றனர். அப்படியே தங்கள் குழந்தைகளை யும் சாட்டையால் அடிக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?

சவுக்கடி அரசாங்கத்தின் மீது எனக்கு நம்பிக்கை யில்லை. நீங்கள் சவுக்கைக் கையில் ஏந்திக்கொண் டிருக்க—உங்கள் குழந்தை அதைக் கண்டு பயத்துடன் நடுங்க-அடி அந்தக் குழந்தையின்மேல்பட-அது துடிக்க- நீங்கள் அடிக்க-இந்த நிலையில் உங்களை போட்டோ பிடிக்கச் சொல்லுங்கள். உங்கள் முகம் கோபாக்கினி கொட்ட - குழந்தையின் கண், நீர் சொரிய - இருக்கும் காட்சி எப்படி யிருக்கும். கட்டாயம் போட்டோ எடுத் துப் பாருங்கள். பின்னர் உங்களால் அடிக்கப்பெற்ற

அந்தக் குழந்தை இறந்து விட்டது, என்று வைத்துக் கொள்ளுங்கள். அதன் உடம்பு - புதையுண்ட பின் அந்தச் சமாதியின் அருகே சென்று உட்கார்ந்துகொள் ளுங்கள் நீங்கள் குழந்தையை அடித்தபோது எடுத்த போட்டோவையும், எந்த தசையை அடித்தீர்களோ அந்தத் தசை இப்போது மண்ணில் புதையுண்டு கிடப்ப தையும் ஒப்பிட்டுப் பாருங்கள் உண்மை உங்களுக்கே விளங்கும்.

ஆகவே இப்படியெல்லாம் செய்வது தவறு. குழந் தைகளை வளர்ப்பதற்கேற்ற வழியா இது? உங்கள் வீட்டில் எப்போதும் சந்தோஷம் நிலவ வேண்டாமா? அப்படிச் சந்தோஷத்தை விரும்பினால் குழந்தைகளை அடிக்கலாமா?

அவர்கள் அல்லவா வீட்டில் இன்பத்தை நிரப்பு கிறவர்கள். அவர்களிடம் நாணயமாக நடந்து கொள் ளுங்கள். வாழ்வின் எல்லாப் பகுதிகளிலும் அவர்க ளுக்குச் சமபங்கு தாருங்கள்.

நீங்கள் அவர்களுக்குக் கொஞ்சம் சுதந்திரம் கொடுங்கள்; சிறிது அன்பு காட்டுங்கள். உங்களால் அவர்களை வீட்டைவிட்டு துரத்த முடியாது. அவர்கள் வீட்டைவிட்டு ஓடிப்போய் விடவேண்டும் என்ற எண் ணம் உடையவர்கள் அல்ல! வீட்டிலேயே இருக்க விரும்புகின்றவர்கள். அவர்கள் சந்தோஷம் அடையும் படி வீட்டை வைத்திருங்கள் - அவர்கள் எந்த விளை யாட்டு வேண்டுமானாலும் விளையாடட்டும். "அந்த புல் தரையிலே பந்தாடுங்கள்; இந்த பச்சை துணியின் மீது பந்து விளையாடாதீர்கள். அந்தச் சாமான்களை சுத்தி யால் உடைக்கலாம் ஆனால் இவைகளைச் சிறிய பிரம் பாலும் தட்டக்கூடாது. சிறிய காகிதத் துண்டுகளை வைத்துக்கொண்டு விளையாடுங்கள். ஆனால் அந்தக் கார்டுகளை, தொடவும் கூடாது" என்றெல்லாம் குழந் தைகளைப் பார்த்துச் சொல்லாதீர்கள். தங்களைவிட

கேவலமானவர்களைப் போல நடித்துக்காட்டும் பொம்ம லாட்டத்திற்கு நீங்கள் போகலாம் ஆனால் சிறந்த அறிஞர்கள் எழுதிய நாடகங்களைக் காணச் செல்லக்கூடாது என்று உங்கள் குழந்தைகளைப் பார்த்து சொல்வதாக நீங்கள் நினைத்துப் பாருங்கள். எவ்வளவு கேவலம்?

உங்கள் வீட்டிலேயே உங்கள் குழந்தைகள் தங்கியிருக்கவேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்களானால், அவர்களுக்கு அந்த வீட்டில் சிறிது பிரகாசம் இருக்குமாறு செய்யுங்கள். குழந்தை தொட்டிலில் படுத்திருக்கும் காலத்திலிருந்தே " அப்படிச் செய்யாதே இப்படிச் செய்யாதே" என்று கட்டுத் திட்டம்போட ஆரம்பித்து விடாதீர்கள். தொட்டில் பருவத்திலிருந்து வாலிபப் பருவம் வரையில் இந்தச் செய்யாதே பாடந்தான் பயிற்றுவிக்கப் படுகிறது. பின்னர் அதாவது இருபத்தொரு வயதிற்குப் பின் மற்றவர்கள் இந்தச் "செய்யாதே" பாடத்தையே அவனுக்கு கற்பிக்கின்றனர். அதை கடந்தால் மதம்; அதன் பிறகு அவன் சேர்ந்திருக்கும் அரசியல் கட்சி, இவ்விதம் ஒவ்வொருவரும் இச்செய்யா'தே பாடத்தையே கற்பிக்கின்றனர்.

உலகில் இவ்விதம் வாழ்க்கை நடத்துவதை நான் வெறுக்கிறேன். நாம் உரிமையோடுவாழ சிறிதளவாவது சுதந்திரம் இருக்கட்டும் என்னை மத விரோதி என்று வேண்டுமானாலும் சொல்லுங்கள்; நாஸ்திகன் என்று கூறுகிறீர்களா அதையும் ஏற்றுக் கொள்ளுகிறேன். இன்னும் வேறென்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள்; எனக்கு அதைப்பற்றி கவலையில்லை என்னுடைய குழந்தைகளை எப்படி நடத்துவேன் தெரியுமா ?

நான் இறந்துவிட்டபின், என் சமாதியின் அருகில் என் குழந்தைகள் வந்து நின்று " இந்த இடத்தில் நித்திரை செய்கிறாரே அவர் யார் தெரியுமா? அவர் எங்களுக்கு ஒரு கணப்பொழுது கூட வருத்த முண்டுபண்

ணியதில்லை. அவர் வாயிலிருந்தோ—ஐயோ !—அஃது இப்போது மண்ணுகி விட்டது - ஒரு கடுமையான வார்த்தைகூட வெளிவந்ததில்லை'' என்று கூறக்கூடிய மாதிரியில் நடத்துவேன்.

குழந்தைகளை ஏனையா கொடூரமாக நடத்துகிறீர் கள் அப்படி நடந்துவது தவறு என்று நாம் கூறினுல், உடனே அவர்கள் அப்படி செய்யவில்லையானுல் எப்படி சீர்படுவார்கள் என்ற கேள்விக் குறிபோட்டுக் காட்டு கிருர்கள். இந்தச் சமாதானம் இவர்மாத்திரம் கண்டு பிடித்ததன்று. பல யுகங்களாக இதே சமாதானத்தைக் கூறி வருகிருர்கள்.

மதம், நாம் கொஞ்சி, குலவி மகிழும் குழந்தையை எப்படி நினைத்து வருகிறது தெரியுமா? குற்றமே நிறைந்த உருவம் என்று கூறுவதுடன் நின்று விடா மல் அளவுகடந்த சாபத்தின் சின்னம்! மீளா நரகத்தில் தீக்குழியில் அழிக்க வேண்டிய பொருள் என்று கருது கிறது.

குழந்தைகள் சிரிக்கக் கூடாது, சந்தோஷமாக இருக்கக் கூடாது என்று கூட கட்டளை யிட்டிருந்தனர், நான் சிறுவனுயிருந்த போது ஞாயிற்றுக் கிழமையை, புண்ணிய நாள் என்று கூறினுர்கள்! அன்றைக்கு நான் சிரிக்கக்கூடாது என்று கட்டளை யிட்டார்கள், விளையா டவும் வேண்டாம் என்றுஎன்னை, பெரியவர்கள் தடுத்து வந்தனர். அப்போதெல்லாம் சனியன்று மாலை சூரி யன் மறைந்து விட்டதுடன் எங்கள் சந்தோஷமும், விளையாட்டு இடங்களும் மறைந்து விடும். அப்போதே ஞாயிறு ஆரம்பித்து விடும். சனியன்று மாலையிலேயே இரவு காலங்களில் ஏற்படும் இருளைவிட பண்மடங்கு அதிக இருள் சூழ்ந்திருப்பது போல் தோன்றும். நாங் கள் அதற்கு 'துக்க இருள்' என்று பெயர் வைத்தோம். பின்னர் இன்பமான வார்த்தைகள் எவர் வாயிலிருந் தும் வெளிவராது. சிரிப்பொலி அங்கும் கேட்கவே

முடியாது. அது தான் இல்லையென்றால் புன்முறுவல் பூத்த, முகங்களாகிலும் கிடைக்குமோ என்று மூலை முடுக்குகளிலெல்லாம் தேடிப்பார்த்தாலும் காண முடி யாது. எல்லா குழந்தைகளும் நோய் கொண்டவர்கள் போல முகத்தை வைத்துக்கொள்ள வேண்டும். அப் படி முகத்தை வைத்துக் கொண்டிருக்கும் குழந்தை தான் பக்தியுள்ள குழந்தை என்று கருதப்பட்டது. யாரும் வாயசைக்கக் கூடாது. வெறும் வாயை அசைத்தால் கூட "மனிதன் இழித்தன்மையைக் காட்டு கிறான்" என்று கூறுவர். அன்றிரவெல்லாம் மௌன விரதம் கொள்ள வேண்டும், மூச்சு விடுகிற காற்றிலே கூட அஜீரண ரோகம் காணப்பட்டது. ஒவ்வொரு வரும் துக்கம் நிறைந்தவராய் காட்சியளிக்க வேண்டும். இந்த அஜீரண ரோகம் யாருக்கு அதிகமாகிறதோ, அவர்கள் தான் நல்ல பக்தி யுடையவர்கள். என்று சிலர் கருதினார்கள். இந்த ரோகத்திற்கு மருந்து கண்டு பிடிக்கப்பட்டு விட்டால், அந்தச் செய்கை தெய்வத திருச்சபையைப் பலமாய் தக்கிவிட்டது போலாகிவிடும்! ஞாயிறு உதய மானதும், இந்தத் தெய்வ பக்தி பெருகு கிறது. நாங்கள் தேவன் வாழும் திருத்தலமாகிய கோ யிலுக்குச் செல்வோம். பாதிரியார் இருபது அடி உயர முள்ள ஒரு மேடையின் மீது நின்று கொண்டிருப்பார். அவரின் திருவாய் உபதேசங்களைப் பொழிந்து கொண் டிருக்கும். முதல்—இரண்டாவது என்று இருபத்து மூன்று வரை சொல்லிக்கொண்டு போய், பின்னர் நடை முறையில் கடைபிடிக்க வேண்டிய விஷயங் களைப் பற்றி பேசுவார். இரண்டு மணி நேரமாகும். அவர் திருப்பேச்சு நிறைவுபெற, அத்துடன் நிறுத்தி விடுவர் என்று கருதவேண்டாம். கடைசியில் கடவுள் அவதாரப் படலத்தைப் பற்றியும் — அவர் உரைத்த உண்மைகளைப் பற்றியும்—கூறி முடிப்பார்.

அந்தக் காலத்தில், அதாவது நான் சிறுவனாக இருந்தபோது மாதா கோயில்களில் குளிர் எவ்வளவு

அதிகமாயிருந்தாலும் தீச்சட்டி வைத்துக் கொள்வது கிடையாது, ஏன் என்றால், நாம் கடவுளை நினைக்கும் போது இந்த கட்டைக்குச் சுகம் தேடக் கூடாதாம்.

முதன் முதலில், எந்த கோயில் தீச் சட்டியை வைத்துக் கொண்டதோ, அந்த தேவலாயத்திலிருந்து கட்சிப் பிரிவுகள் ஏற்பட்டன. எந்தத் திருக்கோயில், முதன் முதலில் இசைக் கருவிகளோடு பிரார்த்தனை செய்யத் தொடங்கியதோ அங்கேயும் பிளவுகள் ஏற்பட்டன.

முதல் உபதேசம் இவ்வாறு முடியும். இதற்கு பின் சற்று ஓய்வு கிடைக்கும், மீண்டும் பாதிரியார் உபதேச காண்டத்தை ஆரம்பிப்பார். அப்போது எங்களைப் பார்த்து " நீங்கள் அனைவரும் நாசத்திற்குப் போகத்தானே தகுதியுள்ளவர்கள் " என்று கேட்பார், "ஆம்" என்று நாங்கள் பதில் கூறுவோம். பின்னர் " நீங்கள் அனைவரும் நாசத்திற்கு போக வேண்டும் என்று ஆண்டவன் கட்டளையிட்டால் அதை ஏற்றுக் கொள்வீர்களா?" என்பார். ஆம்! ஆம்! " என்று உரக்கக் கூவுவோம், நாங்கள். மறுபடியும் தொடங்குவர், உபதேசத்தை. உபதேசம் முடிந்ததும் எல்லோரும் வீட்டிற்கு வருவோம்.

மாலையில் எங்களை சமாதிகள் இருக்கும் இடங்களுக்கு அழைத்துச் செல்லுவார்கள். அந்த இடம் உண்மையிலேயே எனக்குப் பிடித்தமாய் இருந்தது; சந்தோஷமாயும் இருந்தது. அமைதியே குடி கொண்டிருக்கும் கல்லறைகளைக் கண்டதும், சற்று மன ஆறுதல் அடைந்தேன். பின்னர் வீட்டிற்கு வருவோம். அப்போது சில புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் சொல்வார்கள். இப்படி ஞாயிற்றுக்கிழமை ஒழியும்! ஞாயிறு மாலை சூரியன் மறைந்ததும், நாங்கள் விடுதலை அடைவோம். அந்தச் சூரியன் எப்படி மறைகிறான், என்பதை பார்க்க நாங்கள் வெளியில் செல்வோம். சில சமயங்களில் சூரி

யன் மறைய மாட்டேன் என்று அங்கேயே நின்றுவிட்டானு, என்று கூட நினைப்போம். பிறகு சூரியன் மறைவான். நாங்கள் குதூகலத்தோடு கூத்தாடுவோம். ஓய்வு நாட்கள்—புனித தினங்கள்—என்று கூறும் இந்த நாட்கள், எங்களுக்கு சிறைச்சாலை போன்றதுதான்! ஒவ்வொரு கிருத்துவரும் சிறைக் காவலன்தான்! ஒவ்வொரு குழந்தையும் அன்று சிறைக் கைதிதான்! ஆம்! அந்த இருட் சிறையிலே சிரிப்பதே பெருங் குற்றம். ஆம்! புனிதத் திருநாளில், குழந்தை சிரிப்பதே குற்றம் என்று கருதப்பட்டது. தோழர்களே! இதை நீங்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்!

ஒரு சிறுவன், மலர்கள் இதழ் விரிக்கும் ஒரு மரத்தின் மீது காய்ந்து கொண்டிருக்கிறுன், என்று வைத்துக் கொள்வோம். அந்தச் சமயத்தில் மரக்கிளையில் சில பறவைகள் பாட்டிசைத்த வண்ணம் இருக்கின்றன என்று வைத்துக் கொள்ளுங்கள். இந்த அருமையினை அழகாக ரசித்துக் கொண்டிருக்கிறது அந்தக் குழந்தை. அதே நேரத்தில் அந்தக் குழந்தைக்கு "நரகம்" என்று கூறுகிறுர்களே அதைப் பற்றி நினைத்துக் கொண்டால் எப்படி யிருக்கும் நிலை—என்ன பரிதாப நிகழ்ச்சியாக இருக்கும்.

கிருத்துவ மதத்தில் சேராதவர்கள் என்ன கதியை அடைவார்கள் என்பதைப் பாதிரிமார்கள் சொல்வதை நான் கேட்டிருக்கிறேன். அவர்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கும். கோடிக் கணக்கான வருடங்களுக்கு ஒருதடவை ஒரு பறவை தன் மூக்கு நுனியில் ஒவ்வொரு மணலாக எடுத்துச் சென்றுல் உலக முழுவதையும் இப்படியே எடுத்துச் செல்வதாலுல் எத்தனை ஆண்டுகள் பிடிக்கு மென்று எண்ணிப் பாருங்கள்" என்று சொல்வார்கள். இந்த மாதிரியான கருத்துக்களை குழந்தைகளுக்கு எடுத்துக் கூறுவது சரியா? என்பதை நீங்கள் எண்ணிப் பாருங்கள். ஒரு குழந்தையின் சிரிப்

புத்தான் புனிதமான ஒரு நாளை இன்னும் அதிகமாக புனிதப்படுத்தும்.

"இசைக் கருவியை எடுத்து இனிய இசையை மீட்டுபவனே! நான் உனக்கு சொல்லுகிறேன். உன் முழுத் திறமையைக் கையாண்டு இனிய இசையை மீட்டலாம். அந்த இசையைவிட இனிமையாகவும் நீ பாடலாம். குழல் ஊதுவோனே! உன் இன்ப இசையைக் கேட்டு இளம் காதலர்கள் தன்னை மறக்கலாம். அது மட்டுமல்ல! மண்ணகத்தோர் மட்டுமன்றி விண்ணில் நீந்திவிளையாடும் மதியும்—அதன் கதிர்களும் உன் இசையைக் கேட்டு குளிர்ச்சி அடையலாம். ஆனால் கவிஞனே! குழலோனே! உங்களுடைய இன்ப இசைகளெல்லாம் ஒரு குழந்தையின் சிரிப்புக்கு நிகராகுமா? அந்தச் சிரிப்பொலியின் முன் உங்கள் இனிய நாதங்கள் அபஸ்வரமாக வன்றோ கேட்கும். ஆம் அந்தக் குழந்தையின் கள்ளமற்ற உள்ளத்தில் ஊறி எழும் மெய்ச் சிரிப்பு எவ்வளவு ஆற்றலுடையது தெரியுமா?

கண்களுக்கு ஒளியைக் கொடுக்கிறது. இதயத்தை இன்ப வாரிதியில் அழுத்துகிறது. ஆம் அந்தச் சிரிப்பு என்னும் நதிதான் மனிதனுக்கும்—மிருகத்திற்கும் இடையேயுள்ள எல்லை. சிரிப்பே! உன்னிடத்திலிருந்து தோன்றும் ஒவ்வொரு அலையும், கவலையை ஒழிக்கும் ஆற்றல் கொண்டது. நீ கன்னத்தில் ஒளி கொடுத்துப் பிரகாசிக்கின்றபோது அங்கே நீர் தங்கியிருந்தால் அது தானாகவே மறைந்து விடுகிறது. இவ்வளவு ஆற்றல் குழந்தைகளின் சிரிப்புக் கிருந்தும், நிரந்தரத் தண்டனை என்ற கொள்கை குழந்தைகளின் உள்ளத்தில் புகுத்தப் பட்டிருக்கிறது. இந்தக் கொள்கையை நான் பலமாகக் கண்டிக்கிறேன். ஆண்களுக்கும்—பெண்களுக்கும், சின்னஞ் சிறு குழந்தைகளுக்கும் அந்த நிரந்தர தண்டனை உண்டு என்ற கொள்கை எங்கேயிருந்து முளைத்தது?

பழையகால மனிதர்கள் காட்டு மிராண்டிகளாய் குகைகளில் வசித்துக் கொண்டிருந்தார்களே அவர்க

ளுடைய மூளையிலிருந்து முளைத்தது. இது மிருகஜாதியின் அடையாளம். உணவுக்காகக் காத்துக்கொண்டிருக்கும் பாம்பின் ஒளி மிகுந்த கண்களில் இருந்து பிறந்த கொள்கை இது. காட்டுமிராண்டிகளின் ஊளையிலின்றும், உறுமலினின்றும், பிறந்தது இந்தக் கொடிய கொள்கை. ஆம்; தோழர்களே! என் உடலில் பாய்ந்தோடும் ஒவ்வொரு துளி இரத்தமும் இதைக் கண்டிக்கிறது.

தங்கள் உள்ளம் கொண்டிருக்கிற நம்பிக்கையை வெளியிடும் குழந்தைகளை—தண்டிக்கிற ஒரு கடவுள் கம்பீரமான அந்த உயர்ந்த மோட்சலோகம் இருக்கிறதே அங்கே உட்கார்ந்திருக்கிறார் என்று சொல்லுங்கள்! உங்களுடைய வைதிக நம்பிக்கைப்படி பார்த்தால், இந்த உலகில் எத்தனை காடுகள் உள்ளனவோ, அந்தக் காடுகளில் எத்தனை மரங்கள் இருக்கின்றனவோ, அந்த மரங்களில் எத்தனை இலைகள் இருக்கின்றனவோ, அத்தனை இலைகளைவிட பதினாயிரக் கணக்கில் மக்கள் தாங்கள் செய்த பாவங்களுக்காக இறந்து போயிருக்கவேண்டும். அப்படி இறந்த அவ்வளவு பேரும் நரகத்திலே தான் இருக்கிறார்களா? இன்னும் துன்பப் படுகுழியில் தான் வீழ்ந்து தவித்த வண்ணம் உள்ளனரா? இந்தக் குழந்தைகள் அந்தத் தண்டனைகளை அடைய வேண்டியவர்கள் தானா? யோசித்துப் பாருங்கள். இது பொய்களிலே மிகக் கேவலமான பெரும் பொய் என்று நான் கூறுவேன்.

மனித சமுதாயத்தின் கொள்கைகள், ஆவல்கள் இவைகளை எல்லாம் ஏற்றிக் கொண்டும், மனித குலம் என்னும் மூட்டையைச் சுமந்துகொண்டும் செல்லும் கலமானது மரணம்—துன்பம்—அறிவு ஆகியவற்றின்-இராக்காலம் என்கிற ஆழத்தில் மூழ்க நேரிட்டால், அந்தக் கப்பலோடு நானும் மூழ்கிவிட விரும்புகிறேன். அதை விட்டு விட்டு ஏதாவது ஒரு வைதீகப் படகைப் பிடித்துக்கொண்டு எப்படியாவது தப்பித்துக்கொள்ள

வேண்டும் என்னும் கேவல புத்தி எனக்குக் கிடையாது. என்னை யார் நேசிக்கிறார்களோ அவர்களுடனும் நான் எவரை நேசிக்கிறேனோ அவர்களுடனும் அந்தக் கப்பலோடு கப்பலாக நான் மூழ்கிப் போகவே விரும்புகின்றேன்.

தனது குழந்தைகளை நிரந்தரமான துன்பத்திற்கு உட்படுத்துகிற பரம பிதாவான ஒரு கடவுள் இருப்பாராஞல் அந்த மகா மகா கொடிய கடவுளோடு நான் மோட்ச லோகத்தில் இருப்பதைக் காட்டிலும், நரகத்திலே வசிக்க விருப்புவேன். இப்போது தெளிவாகச் சொல்லுகிறேன். மேலே சொன்ன கொள்கைகள் கேவலமான தென்று நான் கூறுகிறேன். இந்தக் கொள்கை எத்தனையோ மக்கள் கண்களில் நீரைப் பெருக்கச் செய்திருக்கிறது. குழந்தைகளின் மேன்மையான இதயத்திற்குக் களங்கத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இந்தக் கொள்கை ஆணை அதட்டியிருக்கிறது-பெண்ணை, பயங்காட்டியிருக்கிறது. குழந்தைகளை அஞ்சச் செய்திருக்கிறது. நல்லவர்கள் மனதில் நடுக்கத்தை உண்டு பண்ணியிருக்கிறது. ஆனால் கீழ் மக்களிடம் இந்தக் கொள்கை எந்தவித மாற்றத்தையும் உண்டு பண்ணவில்லை.

இந்தக் கொள்கை மேன்மையான சுபாவம் உடையவர்களின் இதயத்தை உடைத்து விட்டது. நல்லவர் கன்னங்களில் கோடுகளை விழச்செய்தது. ஆகவே இந்தக் கொள்கை மறுபடியும் உபதேசிக்கவே கூடாது. ஐயா! புரோகிதரே! உங்களைத்தான் கேட்கிறேன். சமாதியின் நுழைவாயிலில் நின்றுகொண்டு, நித்தியத்துவத்தின் நுழை வாயில் நின்றுகொண்டு, மக்களின் எதிர்காலத்தைப் பயங்கரமானதாகவும் அச்சம் தரக் கூடியதாகவும் செய்ய உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? யார் அந்த உரிமையை உங்களுக்குத் தந்தது? இந்தக் கொள்கையை நானும் - நீங்களும்தான் - நம்பவில்லை அப்படி நீங்கள் அதை நம்புவீர்களானால், ஒரு

கணநேரமும் உங்களால் தூங்க முடியாது களங்கமற்ற உள்ளம் கொண்டவன். இந்தக் கொள்கையை பரப்பு வானாகில் கட்டாயம் பைத்தியக்காரனாகி விடுவான். அப்படி அவன் பைத்தியக்காரனாக வில்லை என்றால் அவன் நச்சுப் பல்லை வைத்திருக்கும் நல்லபாம்பின் இருதயமும், கழுதைப் புலியின் மனச்சாட்சியும் உடையவன் என்பதில் ஐயமில்லை.

இந்தக் கொள்கை எதன் பெயரால் பிரச்சாரம் செய்யப்பட்டு வருகிறது என்றால், மதத்தின் பெயரால் எல்லையற்ற அன்பின் பெயரால் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. ஆகவே இந்தக் கொள்கையைப் புகுத்தி உங்கள் குழந்தைகளின் மனதை அசுத்தப்படுத்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் தாங்களே படிக்கட்டும். தாங்களே சிந்திக்கட்டும். தெளிவு கொள்ளட்டும் நீங்கள் பெற்றுப் பிரியத்தோடு வளர்த்த குழந்தைகளை ஏதோ வரிசைப் படுத்தி நிறுத்தவேண்டிய வைதீகத் தூண்கள் என்று நினைக்க வேண்டாம். வெளிச்சம், சூரிய வெப்பம், காற்று இவைகள் தேவையுள்ள மரங்களைப்போல் நினையுங்கள். அவர்களிடம் நேர்மையாக நடவுங்கள், நாணயமாக நடவுங்கள். அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் அளியுங்கள் அவர்களுடைய உரிமைகளும், உங்களுடைய உரிமைகளும் ஒரே எடை உள்ளவை, ஆகவே நீங்கள் அவர்களை அதிகாரம் செய்ய வேண்டாம், அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படியவேண்டும் என்று நீங்கள் கருதாதீர்கள். ஆண்டவன் ஒருவன் உண்டு அவனிடம் அடங்கிக் கிடக்க அடிமை ஒருவனுண்டு என்ற எண்ணத்தைதயே கல்லி எறியுங்கள்.

பழங்காலப் பெற்றோர்கள் என்ன செய்வது என்றால் குழந்தைகளுக்குத் தூக்கம் வரவில்லை என்றாலும், அவர்களை தூங்கும்படி சொல்லி படுக்கைக்கு அனுப்பு வார்கள். அத்துடன் நின்றுவிடுவதுமில்லை அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கும் போதே அவர்களை எழுப்பி விடுவார்கள். நான் என்ன சொல்கிறேன் என்றால் தூக்

கம் வரும்போது குழந்தைகளே படுக்கைக்குச் செல்லட்டும் தூக்கம் கலைந்து தாங்களே எழட்டும் என்பதுதான்.

இவ்விதம் நான் கூறுவதைக் கேட்டும் நீங்கள் "இந்த உபதேசங்கள் எல்லாம் எங்களுக்கு வேண்டாம் பணக்காரர்களுக்குப் போய் சொல்லுங்கள் ஏழைகளாகிய எங்களுக்கு வேண்டாம்" என்று கூறலாம். ஏழைகள் தங்கள் குழந்தைகளை அதிகாலையில் எழுப்ப வேண்டியவர்கள்தான். அவர்கள் எப்படி எழுப்பவேண்டும் என்றால் முதுகில் ஒரு அறை கொடுத்து எழுப்புவதை நிறுத்திக்கொண்டு ஒரு முத்தம கொடுத்து எழுப்ப வேண்டும். இதைக்கூட செய்ய முடியாது என்று சொல்ல முடியுமா? உங்கள் குழந்தைகளுக்கு உரிமை வழங்குங்கள் அவர்கள் தங்கள் சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளட்டும். உங்கள் குழந்தைகள் விரும்புவதை உண்ணட்டும் எதை சாப்பிட வேண்டும் என்பதைத் தீர்மானிப்பது அவர்களுடைய வேலையே ஒழிய உங்களுடைய வேலை அல்ல அல்லவா? தங்கள் தேவை எது என்பது அவர்களுக்குத் தெரியும். சிறுவயது முதற்கொண்டே அவர்களுக்கு நாம் சம உரிமையை வழங்கி விட்டால், தங்களுக்கு எது தேவை என்பதை டாக்டர்களைவிட நன்ருக தாங்களே நிர்ணயித்துக் கொள்வார்கள். வைத்திய சாஸ்திரத்திலே ஏற்பட்டிருக்கும், அபிவிருத்திக் கெல்லாம் என்ன காரணம் தெரியுமா? நோயாளிகளின் அஜாக்கிரதையே ஒழிய வைத்தியர்களின் அஜாக்கிரதை யல்ல.

அதிக நாள் ஜுரம் கண்டு ஒருவன் படுக்கையில் கிடந்தால் அவனுக்கு ஒரு சொட்டுத் தண்ணீர்கூட தரக்கூடாது என்று டாக்டர்கள் கூறுவர். ஏனென்ருல் "அது விஷம்" என்று கூறுவார்கள். ஆனுல் எவனுவது ஒரு ஜுரக்காரன், இந்த தண்ணீர் தாகத்தைச் சகித்துக் கொண்டிருப்பதை விட இறந்து விடுவதே நன்று" என்று கருதி ஒரு டம்ளர் தண்ணீர் குடித்துவிடுவான். அவன் உடம்பு குணமாகிவிடும், இந்த விஷயத்தை

டாக்டரிடம் நாம் கூறினல் அவர் ஆச்சரியப் படுவார். நோயாளியின் உடல் வன்மையைப் பாராட்டுவார். அந்த நோயாளியும் தண்ணீரைக் குடித்தே நலமடைவான். கடைசியில் டாக்டர்களே சொல்லுவார்கள் "ஜுரத்தின்போது, தண்ணீர் குடிப்பது நல்லது" என்று. ஆகையால் இதுபோன்ற விஷயங்களில் டாக்டர்களின் முடிவைக் காட்டிலும், இயற்கையின், வாசகத்தில் எனக்கு நம்பிக்கை யிருக்கிறது.

உரிமையைத் தாராளமாகக் கொடுங்கள், உங்கள் குழந்தைகளுக்கு:- அவர்கள் உங்கள் வழிக்கு வருவார்கள் நீங்கள் செய்வது போலவே எல்லாம் செய்வார்கள். ஆனல் இதைத்தான் செய்யவேண்டும் அதைச் செய்யக் கூடாது என்று வற்புறுத்திக் கூறுவீரானல், மனித இருதயத்தில் பதுங்கி யிருக்கும் ஒரு பெரும் சக்தி பிறரால் ஏற்படுவதை எதிர்த்து நிற்குமாறு தூண்டுகிறது. இந்த சக்தி மனிதர்களுக்கு இருப்பது உலகிலேயே மிகவும் உயர்ந்த ஒரு பெரிய வாய்ப்பு!

நூறு ஆண்டுகளுக்கு முன்னர் எல்லா மக்களும் வைத்தியர்களின் விருப்பப்படியே நடந்திருந்தால் அவர்களுடைய கதிஎன்னவாயிருக்கும்? எல்லோரும் இறந்து விட்டிருப்பர்.

உலக வரலாற்றின் எந்தக் காலத்திலாவது மக்கள் தெய்வத் திருச்சபையின் வழியைப் பின்பற்றி நடந்திருப்பார்களானல், அவர்கள் அனைவரும் மூடர்களாகப் போயிருப்பர். தனக்குத் தானே - அதாவது சுயமாக - சிந்திக்கும் ஓர் உத்தமன் - அறிஞன் - எல்லாக் காலத்திலும் தோன்றி யிருந்து மூடர்களை எதிர்த்தது நமக்கு ஆறுதல் அளிக்கிறது.

குழந்தைகள் தாங்களே சிந்திக்க வேண்டும் அந்த உரிமையை நாம் கொடுத்தாக வேண்டும் இது தான் நல்லது என்று நான் கருதுகிறேன். ஏன் இதைக் கூறுகிறேன் என்றல், ஒவ்வொரு குடும்பத்திலும் ஜனநாயக

மணம் வீச வேண்டும் என்பது தான் என் ஆசை! இந்த உலகில் உயர்ந்தது ஒன்று இருக்குமானல் — சிறந்தது என்ற பெயரை பெறத்தகுதி வாய்ந்தது ஒன்று இருக்குமானல், அதுதான் எல்லோரும் சமமாக வாழும் குடும்பம்.

குழந்தைகள் சாப்பிடும் போதும், பெற்ருேர்கள் கண்டிக்காமல் விடுவதில்லை. "வாய் திறவாமல் சாப்பிடுங்கள்" என்று தடை வுத்தரவு போடுவார்கள். சாப்பிடுவது கூட, ஒரு பெரிய வைதீகச் சடங்கு என்று கருதி, அவர்கள் சாப்பிடுவார்கள். குழந்தைகளையும் மிரட்டுவார்கள்.

வாழ்கிறோம், நாம். நமது வாழ்வைப் பயபக்தியோடு, வைதீகக் கண் கொண்டு பார்க்கவே கூடாது. ஒருவருக்கொருவர் தாங்கள் பார்த்ததையும், கேட்டதையும் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதை நான் விரும்புகிறேன். குழந்தைகள் சாப்பிடும்போது ஒருவருக்கொருவர் பேசி மகிழ்வதை நான் கேட்கும் போது, என் செவிக்கு எவ்வளவு இன்பத்தைத் தருகிறது தெரியுமா? சங்கீதத்தால் அந்த இனிய இன்பத்தை தர முடியாது! அதனல் நான் மறுபடியும் கூறுகிறேன். குழந்தைகள் சுதந்திரமாய் இருக்கட்டும், அவர்களிடம் நியாயமாய் நடவுங்கள், நாணயமாய் இருங்கள். அவர்கள், ஆம்! அந்தக் குழந்தைகள் உங்களுடைய அன்பையும், இன்பத்தையும் அதிகப் படுத்துவார்கள்.

ஆண்கள் மரங்கள், பெண்கள் அந்த மரத்தை ஆதாரமாகத் தழுவிக் கொண்டு அதனைச் சுற்றி இருக்கும் கொடிகள்; குழந்தைகள் அந்த கொடிகளில் கூத்தாடும் மண மலர்கள்,

மக்கள் சமுதாயம் எத்தனையோ குற்றங்களைச் செய்திருக்கிறது. அதற்காக அந்த சமுதாயத்தை நான் மன்னித்து விடுகிறேன். இந்த உலகம் நல்லவர்களை உயர்த்தும் விதமாய் அமைக்கப் படவில்லை. இந்த உல

கம் பெரும்பாலும் நீர்ப்பரப்பாய் இருக்கிறது. இதனால் மீன் உற்பத்தித் தொழிலுக்குத்தான் இங்கு சௌகரியம் உண்டாகுமே தவிர மனித உற்பத்தி தொழிலுக்குச் சௌகரியம் கிடையாது. இந்த நில உலகில் எட்டில் ஒரு பகுதி இடம் கூட பெருமை வாய்ந்த ஆண், பெண்களை உற்பத்தி செய்யக் கூடிய விதமான மண்ணையும், சீதோஷ்ணத்தையும் உடையதாயில்லை. வட கடலில் பனிப் பிரதேசம் இருக்கிறது. அங்கு கோதுமை முதலிய தானியங்களை விளைவிக்க முடியாதது போல், பக்குவமான மண்ணும் சீதோஷ்ணமும் இருந்தாலொழிய சிறந்த அறிஞர்களை உண்டாக்க முடியாது. சூழ் நிலை நல்ல முறையில் அமைய வேண்டும். மனிதன் ஒரு உற்பத்திப் பொருள். அந்தப் பொருள் விளைய தேவையான மண்ணும், அதற்கேற்ற உரமும் தேவை. தைரியமாய்—தீவிரமாய்—மனிதன் போராடினால் இயற்கைச் சக்தியின் தடைகளை மீற முடியும்.

அறிவு நிரம்பிய ஆண்—பெண்-தோன்றக் கூடிய இடம் இந்த உலகத்திலே ஒரு சிறு பாகந்தான். பூமியின் தெற்கு பாகத்தில் தான் அறிவுள்ள மனித உற்பத்திக்குத் தேவையான சீதோஷ்ணம் இருக்கிறது. ஆனால் இதன் பெரும் பாகம் கடலிலே போய் மடிகிறது. இதன் விளைவு என்னவென்றால் பூமியின் தென் பகுதியில் பேரறிஞர்கள் எவரும் தோன்றவில்லை. பூமியின் வட கோடியிலும் அறிஞர்கள் கிடையாது. ஏனென்றால் அங்கே தாங்க முடியாத அளவு குளிர். அதைப்போலவே தென் கோடியிலும் அறிஞர்கள் கிடையாது. ஏனென்றால் அங்கே அதிக உஷ்ணம், எனவே அறிஞர்கள் உற்பத்தியாக வேண்டுமென்றால் கோடைக் காலமும் தேவை; குளிர் காலமும் தேவை.

எந்த நாட்டில் மனிதன் தன் உடம்பை மூடிக் கொள்ள போர்வை தேடாமல் இருக்கிறானோ எங்கு மேகங்கள் சூரியனை மறைத்துக் கொண்டிருக்கின்றனவோ; அங்கு மனிதனுடைய இயற்கையான தொழில்

புரட்சிதான் கைத் தொழிலுக்கும் அறிவுக்கும் தாயாயிருப்பது குளிர் காலம் தான் தாய். அதைப் போலவே குடும்பத் தொடர்புக்கும் இந்தக் குளிர் காலமானது குளிர்ச்சி நிறைந்த தன் கைகளுக்குள்ளே கணவனையும், மனைவியையும், இனிமையான குழந்தையையும் ஒன்று சேர்த்து அணைத்துக் கொண்டிருக்கிறது.

இந்த நில உலகிலே மோட்ச லோகத்தைப் பார்க்க வேண்டுமானல், அது எங்கே கிடைக்கும் என்று நினைக்கிறீர்கள்.

குளிர் காலத்தில், இரவு நேரங்களில் ஒரு வீட்டில் நுழைந்து பாருங்கள், சன்னல்கள் திறந்திருக்க, கணப்புச் சட்டியைச் சுற்றிக் குடும்பத்தின் அனைவரும் ஒன்ருக உட்கார்ந்திருப்பார்கள், தள்ளாத ஒருத்தி தையல் தைத்த வண்ணம் உட்கார்ந்திருப்பாள், ஒரு பூனைக் குட்டி விளையாடிக் கொண்டிருக்கும். குழந்தைகள் " இது எனக்கு அது உனக்கு" என்று விளையாட்டுப் பொருள்களை பங்கு போட்ட வண்ணம் இருப்பர். தந்தையார் புத்தகத்தைப் படித்த வண்ணமே இருப்பார். அவரின் வாயிலிருந்து வரும் புகையான குடும்ப இன்பம் என்ற பீடத்திலிருந்து ஏற்படும் தூபம் போல் காட்சியளிக்கும். இப்படிப்பட்ட வீட்டை நான் பார்க்கிற போது, நான் ஒரு பெரும் புண்ணியவான் நல்ல குடும்பத்தைக் காணும் பாக்யம் பெற்றேன் என்று கருதிக் கொள்ளுவேன்.

அறிவு வளர்ச்சி என்னும் பனிக் கட்டியி லிருந்து மலர்ந்த மணமிக்க மலர்களுக்கு, நாகரீகம்—சுதந்திரம், நீதி, தருமம், என்ற பெயரிட்டு அழைக்க நான் விரும்புகின்றேன்.

செழுமையுள்ள கணவாய்ப்பிரதேசங்களிலும் மலை நிழல்களிலும எப்படிச் செடி கொடிகள் உற்பத்தியாகின்றன என்பதை நினைத்துப் பாருங்கள். கணவாய்ப் பிரதேசங்களில் இனிய பழங்கள் தரும் மரங்களும்

உண்டாகின்றன. ஆனால் உயர உயர மலைச் சிகரங்களில் புதர்கள்தான் காணப்படுகின்றன. இவை எதைக் காட்டுகின்றன? சீதோஷ்ணம் சரியாகவும் மண்ணின் உரமும் இருக்கவேண்டும் என்பதைக் காட்டவில்லையா? அதைப் போலவே அறிஞர்கள் உற்பத்தி யாவதற்குச் சரியான மண் தேவைப் படுவதுடன் சீதோஷ்ண நிலை யும் ஏற்றபடி அமைய வேண்டும்.

சென்ற சில ஆண்டுகளுக்கு முன்னர் அமெரிக்கா வுடன் ஸாண்ட்டோ டாமிங்கோ என்ற இடத்தைச் சேர்த்து விடுவது பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடை பெற்றன. அப்போது நான் வாஷிங்டன் நகரில் இருந் தேன். ஸாண்ட்டோ டாமிங்கோ அமெரிக்காவுடன் சேர்க்கப்படுவதை நான் ஏற்கவில்லை. மறுத்தேன். அந்த இடம் நல்ல சீதோஷ்ண நிலையை உடைய தென் றும் அங்கு எல்லாப் பொருள்களும் விளையும் என்றும் நான் கேள்விப்பட்டிருந்தேன்.

அதனால் தான் நான் அந்த இடத்தை ஆக்ரமிப் பதை எதிர்த்தேன். "அந்த இடம் நமக்கு வேண்டாம் அங்கு திறமை வாய்ந்த அமெரிக்க மக்களை உற்பத்தி செய்ய முடியாது. அங்குள்ள சீதோஷ்ணம் நம்மைக் கெடுத்துவிடும். வேண்டுமானால், பாதிரிமார்களில் ஒரு ஐயாயிரம் பேர்—முதலாளிகளில் ஒரு ஐயாயிரம் பேர்-கல்லூரி ஆசிரியர்களில் ஐயாயிரம் பேர்—பலசாலிகள் ஐயாயிரம் பேர் இவர்களை அனுப்பிப் பாருங்கள். அவர் களின் இரண்டாவது தலைமுறையினர், வெறுங்கா லுடன் கோவேறு கழுதைகளின் மீது ஏறிக்கொண்டு, ஒரு ஞாயிற்றுக்கிழமை யன்று கோழிச் சண்டையைப் பார்க்கச் செல்வார்கள்" என்று கூறினேன். ஒரு தேசத் தின் சீதோஷ்ணம் மனிதனை மாற்றிவிடும் சக்தி வாய்ந் தது.

ஆனால் விஞ்ஞான அறிவு வளர்ந்து கொண்டு வரு கிறது. இதனால் அறிஞர்களை உண்டாக்கும் இடமும்

விரிந்து கொண்டே போகிறது. வட துருவப் பகுதிகளில் வீடுகள் அமைக்கலாம், சாதாரண உடைகள் உடுத்திக் கொள்ளலாம், நல்ல உணவும் உண்ணலாம். அடுப்பு எரிக்க வேண்டிய பொருள்களும் கிடைக்கின்றன. இதைப் போலவே தென்பாகத்தின் வெம்மையையும் சமாளித்துக் கொண்டுதான் வருகிறோம். நாம் மறு உலகத்தில் கவனம் செலுத்துகிறோமே அதை விடுத்து இந்த உலகத்தின் மீதே முழு கவனமும் செலுத்துவோமானால்; இந்த உலகத்தில் பல அறிஞர்களை உற்பத்தி செய்து கொண்டே போகலாம்.

மிருகத்தினிடமிருந்து சிறுகச் சிறுக வளர்ந்து கொண்டே வந்து மனிதனானான் என்பது என் நம்பிக்கை. இது தான் உண்மை என்று நான் கூறமாட்டேன். இது உண்மையாய் இருக்கும் என்று நான் நம்புகிறேன் என்றுதான் கூறுகிறேன். இந்த முடிவு எட்டுக்கு ஏழு பங்கு சரியானதாய் இருக்கும் என்று நான் கருதுகின்றேன்.

முதல் முதலில் என்னிடம் ஒருவர் வந்து 'நீ மிருகத்திலிருந்து வளர்ந்து மனிதனானாய்' என்று கூறிய போது அவர் சொன்னது எனக்குப் பிடிக்கவில்லை. நமது முன்னோர்களைப் பற்றிப் பெருமை அடைய வேண்டிய விஷயமொன்றுமில்லையா என்று வருந்தினேன். பின்னர் நெடுநாள் சிந்தித்தேன். அதன் பிறகுதான் மிருகத்தின் வளர்ச்சிதான் மனிதன் என்பது சரி என்று எனக்குப் பட்டது. அதனால் பழங்கால மனிதனின் எலும்புகளைப் பற்றியும் தசை—நரம்புகளைப் பற்றியும் ஆராய ஆரம்பித்தேன். அந்தப் பழங்கால மனிதனின் காதுகளிலிருந்து கன்னம்வரையில் ஒருவித நரம்பு ஓடிக்கொண்டிருந்ததென்பதைக் கண்டேன், அதன் பின்னர் நமது முன்னோர்களுக்குச் செவித்துவாரங்களை மூடிக்கொள்ளும்படி செவிகள் பரந்து இருந்தனவென்றும், அவை நாள் ஆக ஆக குறுகிப் போய்விட்டனவென்றும் தெரிந்து கொண்டேன். இப்போது நம் காதுகள்

பெரியதாக இல்லாமல் இருப்பது மிகவும் நல்லது என்றுதான் அறிகிறேன்.

மூளையற்ற வெறும் உருவமாகி, அந்த நிலையிலிருந்து சிறுகச் சிறுக வளர்ந்து கடைசியில் மனிதனாகி அந்த மனித வர்க்கத்தில் ஷேக்ஸ்பியர் போன்ற அறிஞர்களை உண்டாக்கித் தந்தது எந்த வர்க்கமோ, அந்த வர்க்கத்தின் அந்த வமிசத்தின் வழி வந்தவன் நான் என்று கூறிக் கொள்வதில் எனக்குப் பெருமை ஏற்படுகிறது. கடவுளின் அருள் பெற்ற தம்பதிகள் வாழ்க்கையைத் தொடங்க—அந்த வாழ்க்கையின் வழியில் பல மனித உருவங்கள் தோன்ற—அந்த பரம்பரையில் நான் தோன்றினேன் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்பவில்லை. ஆனால் படிப்படியாய்—சிறுகச் சிறுக, சிந்தித்துச் சிந்தித்து, தெளிவுகொண்டு, தன் நம்பிக்கையிலே வளர்ச்சி அடைந்த மானிட வமிசத்தைச் சார்ந்தவன்—மனித குலத்தைச் சார்ந்தவன்-என்று கூறிக் கொள்வதிலேயே பெருமைப்படுகிறேன்.

---

# 4

என் மனதில் நான் நினைத்த எண்ணங்களை உங்கள் முன் தெரிவிக்கிறேன். தோழர்களே, சிந்தியுங்கள்! யார், எதைச் சொன்னாலும் சிந்திக்காமல் கண்ணை மூடிக்கொண்டு நம்புவது சிறந்ததா? அல்லது எதையும், யார் சொன்ன போதிலும், நன்கு சிந்தித்து ஏற்றுக் கொள்வது நல்லதா?

அச்சம் நமக்கு நல்ல வழியினைக் காட்டுமா? அல்லது அறிவு சிறந்த வழியைக் காட்டுமா? இந்த உலகம் உயிர் உள்ளவர்களால் நடத்தப்பட வேண்டுமா? அல்லது இறந்து விட்டவர்களின் இஷ்டப்படி நடக்க வேண்டுமா? தோழர்களே! சிந்தியுங்கள். என்னைப் பொருத்தவரையில் நான் சிந்தித்துத்தான் எதையும் நம்புவேன். எனக்கு அறிவுதான் வழிகாட்டி. உலகம் உயிருள்ளவர்களால்தான் நடத்தப்பட வேண்டும். சவக்குழியா சிங்காதனமாகும்? பிணமா அரசனாகும்? மனிதன் சாம்பல் மீதா வாழ்க்கையை நடத்த வேண்டும்?

இன்று வாழ்கின்ற தத்துவ ஞானிகளைவிட—விஞ்ஞான வித்தகர்களைவிட-அறிஞர்களைவிட—நமக்கு முன் வாழ்ந்தவர்களுக்கு அதிகம் தெரியும் என்று எப்படிக் கூற முடியும்? இதைவிட இன்னும் அதிகமாக எதையும் சொல்ல என்னால் முடியவில்லை. நாம் இந்த உலகத்தைப் பற்றிய எல்லா நுணுக்கங்களையும் தெரிந்து கொண்டா இருக்கிறோம்? ஒருக்காலும் இல்லை. அப்படியிருக்க, வேறு உலகத்தைப்பற்றி நமக்கென்ன தெரிந்திருக்க முடியும்? ஒன்றும் தெரிந்திருக்க முடியாது.

நமது தகப்பன்மார்கள் அறிவு நிரம்பிய அடிமையாய் யிருந்தார்கள். அவர்களின் தகப்பனார்கள் வெறும் அடிமைகளாய் இருந்தனர். நாம் இப்போது நடைமுறை

யில் வைத்துக்கொண் டிருக்கிறோமே, அந்தக் கொள்கை களை-கோட்பாடுகளை உண்டாக்கியவர்கள் அறிவில்லாத வர்கள். மிருகத்தன்மை வாய்ந்தவர்கள். நாம் இன்று கடைப்பிடித்து ஒழுகுகின்ற ஒவ்வொரு கொள்கையின் மீதும் சாட்டையின் அடியைக் காணலாம். இரும்பு விலங்கின் துருப்பும் தெரியும். தொழுக்கட்டையின் தூசும் படிந்து கிடக்கிறது.

மூட நம்பிக்கை இருக்கிறதே, அது அடிமைத் தனம் பெற்றெடுத்த குழந்தை தானுக—சுய அறிவோடு சிந்தனை செய்தால்தான் நமக்கு உண்மை தெரியும். எல்லோரும் சுயமாக எண்ணும் உரிமை பெறவேண் டும். அத்துடன் நின்றுவிடாமல் எண்ணியதை எடுத்து வெளியே சொல்லும் உரிமையையும் பெறவேண்டும். அந்த உரிமைகளைப் பெற்றுவிட்டால் ஒவ்வொருவ ருடைய மூளைகளிலிருந்தும் சிறந்த கருத்துகள் முளைத்து தானே வெளிவரும். அன்றுதான் உலகில் அறிவுக் களஞ்சியம் நிறைந்து விளங்கும்.

தெய்வத் திருச்சபைகளுக்கு அஞ்சி நடுங்கும் ஆண் களும் பெண்களும் இருக்கும் வரையில்—புரோகிதன் அடிக்கடி பயத்தை உண்டுபண்ணிக்கொண் டிருக்கும் வரையில்—அது இன்னது என்று புரியா விட்டாலும், அதனை வணங்கிக்கொண்டு வரும் மக்கள் உள்ளவரை யில்—தங்களின் சுயமரியாதையை இழந்து விடுவது தான் மரியாதை என்று மக்கள் எண்ணிக்கொண்டிருக் கிற வரையில்—தேவபீடங்களுக்கு ஆதிக்கம் இருக்கும் வரையில்—மக்கள் குலம் வெறும் புத்தகம் ஒன்றை தொழுதுகொண் டிருக்கும் வரையில் உலகில் அறிவை அடமானம் வைத்தவர்கள் தான் தோன்றுவார்கள். நாடோடிகள்கூட மூட நம்பிக்கை என்னும் கிழிந்து போன அந்தக் கந்தல் துணிகளைத்தான் உடுத்திக் கொண்டு திரிவார்கள்.

பைபிள் ஒன்றுதான் தமது உரிமைகள் அத்தனையும் அளந்து கூறும் உயர்ந்த நூல் என்று பெண்கள் நினைத்துக் கொண்டிருக்கிற வரையில், அவர்கள் ஆண்களின் அடிமைகளாகத்தான் இருப்பார்கள். அந்தப் பைபிள் ஒரு பெண்ணுல் எழுதப்படவில்லையே! அதில் பெண்கள் அவமானம் அடைய வேண்டிய விஷயங்கள் தானே நிரம்பிக் கிடக்கின்றன. பெண் மனிதனின் சொத்து என்றல்லவா கருதப் படுகிறுள். "நீ ஏன் தாய் என்ற பெயர் எடுத்தாய்? அது பெருங் குற்றம் ஆகவே மன்னிப்புக் கேள்" என்றல்லவா கூறுகிறது. அந்த நூல் எப்படி, ஏசுநாதருக்குத் தன் கணவன் கீழ்ப்படிந்தவனுகிருனே, அதேபோல் தானும் தன் கணவனுக்குக் கீழ்ப்படிந்தவள் என்றல்லவா அவள் நினைக்கிருள்! அவள் பேசவும் அனுமதிக்கப் படவில்லையே! அவளுடைய அழுக்குப் படிந்த நாக்கிலிருந்து அந்த வேத ஒலி வெளிவரக் கூடாதே! அவள் மௌனத்தில் தான் எல்லாவற்றையும் கற்றுக்கொள்ள வேண்டும்.

நாகரீகம் வாய்ந்த ஒரு குடும்பத்தை இந்தப் பைபிள் காட்டுமா? உரிமைவாய்ந்த ஒரு அன்னை, அவளைச் சுற்றிச் சுற்றி உரிமையுடன் ஓடி விளையாடும் குழந்தைகள், அவளோடு உரிமையோடு பேசும் கணவன் - இவர்களெல்லாம் பைபிளிலே உண்டா? கிடையாது! பைபிள் எழுதியவருக்கு இவைகளெல்லாம் தெரியாது.

குடும்பத்தின் ஜனநாயகம் அவர்கள் அறியமாட்டார்கள். அடுப்பங்கரையின் குடியரசு வாழ்வு, அவர்கள் கண்டதில்லை. கண்டாலும் அதில் எங்களுக்கு நம்பிக்கை யில்லை யென்று கூறுவர். இத்தகு பெரிய மனிதர்களுக்கா குழந்தைகளின் உள்ளங்களைப் பற்றித் தெரியப் போகிறது? அது தெரியாதபோது, உரிமைகளைப்பற்றி அவர்களுக்கு என்ன தெரிந்திருக்கும்? இவர்களுக்கு இவைகள் தெரியாது. ஆனுல் பலாத்காரத்தை எப்படி உபயோகிப்பது என்பதுதெரியும். சாட்டையை

எப்படி உபயோகிப்பது என்பது நன்கு விளங்கும்! இப்படிப் பட்டவர்கள் கொள்கை வகுத்திருக்கின்றனர். இவர்கள் கொள்கைகள் கோடிக்கணக்கான குடும்பங்களை மிருகத் தன்மை யுடையதாய் செய்துவிட்டன. குழந்தைகளின் கண்களிலே நீரை நிரப்பி விட்டன.

உரிமையுடன், ஆணும் பெண்ணும் ஒரு தலைமுறை கூட இந்த உலகில் வாழ்ந்தது கிடையாது. இதற்கு ஒரு கொள்கையை நிர்ணயிக்கும் காலம் இன்னும் உதயமாக வில்லை. தோழர்களே! காத்திருங்கள். அந்த நல்ல காலம் வரும் வரையில் காத்திருங்கள்.

விலங்குகள் உடைக்கப்படுகின்ற வரையில் காத்திருங்கள். குகைகளைக் கோயில்களாகக் கருதாத வரையில் காத்திருங்கள். முகத்தை சுளித்துக்கொண்டு மௌனமாய் இருப்பதுதான் ஞானத்தின் அடையாளம் என்று எண்ணப்படும் வரையில் காத்திருங்கள். கோழைத் தனத்திற்கு பெயர் பக்தி என்று கூறப்படும் வரையில் காத்திருங்கள்! இறந்துபோனவனுக்கு ஈடாக உயிருள்ளவனைக் கருதும்வரையில் காத்திருங்கள். சவப் பெட்டியைவிட தொட்டில் உயர்ந்தது என்று எண்ணப் படும் வரையில் காத்திருங்கள்! பிறர் என்ன சொல்லுகிறார்கள், என்பதைப் பற்றி நினைக்காமல் நாம் அறிந்ததை நாம் சொல்லும் உரிமை நமக்குக் கிடைக்கும் வரை பொறுத்திருங்கள். உபதேசிகளின் இருப்பிடத்தில் ஆசிரியர்கள் அமரும் வரையில் பொறுத்திருங்கள். பின்னர் உலகம் சுதந்திரம் அடையும். அதன் பிறகு நீங்கள் கொள்கைகளை வரையறுக்கலாம். அதுவரை பொறுத்திருங்கள்.

அந்தக் கொள்கையில் ஒரு வார்த்தை தான் இருக்கும். அதன் பெயர் மக்கள் உரிமை. அதாவது சுதந்திரம்.

ஏ சுதந்திரமே! உரிமையே! நீ எங்கே இருக்கிறாய்? கைக்கெட்டாத ஆகாயத்தில் நீ மிதந்துகொண் டிருக்காதே!

அல்லது ஒரு கவிஞனின் கனவில் தோன்றித் தோன்றி மறையாதே! உற்சாகியின் உள்ளத்தில் ஒளிந்துகோண்டிராதே! வா! கீழே இறங்கி வா! எங்கிருந்தாலும் சரி, ஓடிவா, மக்களிடம்! ஆம்! ஆண்களிடம் — பெண்கள் மத்தியில் — குழந்தைகளிடம் — நீ வாசஞ்செய்! மக்கள் மத்தியில் நீ இருப்பிடத்தை ஏற்படுத்திக்கோள்.

எதிர் காலமே! உன்னை நான் எப்படி அளந்து காண முடியும்! உலக அறிஞர்களின் அறிவிலிருந்து என்னென்ன புதிய கருத்துக்கள் புறப்படுமோ? என்னென்ன எண்ணப் பூங்காக்கள் தோன்றி மணம் வீசுமோ? எதிர்கால அணங்கு என்னென்ன புகழாடைகளால் தன்னை அழகுபடுத்திக் கொள்வாளோ? புதிய எண்ணம் என்ற பெரிய போர்க்களத்தில் என்னென்ன வெற்றிகள் கிடைக்குமோ? ஆம்! அதைப் பற்றி என்னால் ஒரு கனவு கூட காணமுடியாதே! ஆனால் ஒன்று மட்டும் நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன்.

விரிந்து பரந்து கிடக்கும் எதிர்காலம் என்னும் கடலிலிருந்து, ஆண்—பெண்—குழந்தை முதலியவர்கள் அடங்கிய மக்கள் உரிமை என்னும் அருமையான ஒருகலத்தைத் தவிர வேறு எதுவும் நிகழ்கால கரையைத்தொட இயலாது! இந்த மக்கள் உரிமை, நன்கோடையை விட மேலானது. ஆசீர்வாதத்தைவிடச் சிறந்தது. ஆகவே மக்கள் உரிமை பெருகித் தழைக்கட்டும்!

# இங்கர்சால் கூறுகிறார்

—o—

"மனிதனால் கற்பனை செய்யப் பட்ட சிருஷ்டிப் பொருள்களுள் சிறந்ததாகக் காணப்படுவது ஒரு யோக்கியமான கடவுளே யாகும். ஒவ்வொரு தேசத்தினரும் ஒவ்வொரு கடவுளை உண்டு பண்ணி யிருக்கிறார்கள்."

* * *

"அர்ச்சகர்கள்—ஆச்சாரியர்களான இப் புரோகிதர்களின் வேலையோ, தங்கள் தங்கள் தெய்வங்களின் வான்மையை வப் புகழ்ந்து, தங்கள் தெய்வங்கள் தான் உலகிற் சிறந்தது என்றும், ஏனைய தெய்வங்களையெல்லாம் விழுங்கி விடக் கூடிய சக்தி உடையது என்றும் விளம்பரம் செய்து வம்பளந்து கொண்டிருப்பதே யாகும்."

"தெய்வங்களில் பெரும்பாலானவைகள் பழிக்குப்பழி வாங்கும் சுபாவமும் மிருகத் தன்மையும் காம வெறியும் அறிவின்மையும் மூர்க்க சுபாவமும் அதிகம் உடையன."

* * *

"இச்சிறு உலகின் உற்பத்தியைப் பற்றிய உண்மையான வரலாறு எக் கடவுள்களுக்கும் எள்ளத்தனையும் தெரியாமலே போய் விட்டது. பூகர்ப்ப சாஸ்திர, வான சாஸ்திர வாசனை இவைகளைப் பற்றிய அறிவு சிறிதும் கிடையா. இப்படிப்பட்ட கடவுள்களே மிகக் கேவலமான சட்ட கர்த்தர்களாகவும், சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருபவர்களாகவும் இருந்தன. அப்படிக் கொண்டு வருவதில் சாதாரணமாக ஒரு மனிதனைவிட தாழ்ந்த யோக்கியதை யுடையன வென்றுதான் சொல்ல வேண்டும்."

* * *

"இத் தெய்வங்கள் தகாத காரியத்திற்குங் கூட ஜனங்களை தாழ்வாகவும், பணிவுடனுமே நடக்கும்படி கட்டளையிட்டன. இவைகளைத் திருப்திப்படுத்த மனிதன் முகங்குப்புற விழுந்து தண்டனிட்டு மண்ணைக் கவ்வ வேண்டும். ஆனால், "இக் கடவுளுக்கு" தங்களைப் படைத்த மக்களிடம் பிரியம் அதிகம். அவர்கள் கொள்ளையடிக்கவும், கொலை புரியவும், பிறர் மனைவியை, புதல்வியை பலாத்காரமாய் கற்பழிக்கவும் இக் கடவுள்கள் போதிய உதவிகள் செய்துள்ளன."

"ஒரேயொரு கடவுளோடு திருப்தியடைகிற தேசத்தினர் மிகச் சிலரே யாவர். தெய்வங்களைச் சிருஷ்டித்தலோ மிகச் சுலபம்; அதற்கு வேண்டிய சாமான்களின் விலையோ மிகச் சொற்பம். எனவே வீதிதோறும் கோவில் கட்டும், தெய்வங்கள் மலிந்த சந்தை கட்டும், ஆகாயம் நிறைந்த ஆவி (தெய்வம்) கட்டும் என்ன குறைவு?"

* * *

இத்தகைய இறைவனைத்தான் நாம் இதய பூர்வமாய் இறைஞ்ச வேண்டுமாம், முழங்காற் படியிட்டு தேவரீர் நல்லவர், தயாள குணமுடையவர், நியாயமானவர், அன்புடையவர் என்று புகழ வேண்டுமாம். நமது உன்னதமான உணர்ச்சிகளை யெல்லாம் அடக்கி இதயத்தெழும் சிந்தனைகளை காலால் மிதித்துத் தள்ள வேண்டுமாம். இவ்வாறு நம்மை நாமே கேவலப்படுத்திக் கொள்ள—பொய்யர்களாக்கிக் கொள்ள மறுத்தோமானால் உடனே நாமிங்கே இந்த உலகில் வெறுக்கப்பட்டு, எதிர்க்கப்பட்டு, தூற்றப்பட்டு, விலக்கப்பட்டுத் தள்ளப்படுகிறோம். நாமிறந்த பிறகோ, நமது உதவியற்ற ஆத்மாக்களைப் பிடித்து அங்கு (மேல் லோகத்தில்) அழியாத அக்கினியில் தள்ளி அவதிப்படச் செய்வதாக இந்தத் தெய்வங்கள் பயமுறுத்துகின்றன. ஆனால் ஜனங்கள் எதிர்க்கட்டும், இந்தத் தெய்வம்

பயமுறுத்தட்டும், நாம் அவர்கட்கு உண்மையை புகட்டு வோம். இப்படிப்பட்ட தெய்வத்தை வெறுத்து எதிர்ப் போம்."

* * *

கடவுள் எம்மெல்லோரையுமே காப்பாற்றுவார் என்று சொல்வது தெய்வத்திற்கே துரோகமான ஒரு பெரும் பாதக மாகும். வேதம் கடவுள் வாக்கு ஆனால் உண்மையை விசாரித்தால் எந்தப் புத்தகத்தையாவது தெய்வ வாக்கு என்று நிரூபிக்கத்தக்க ஆதார மெதுவும் இதுவரை கிடைக்க வில்லை. இனி கிடைக்கப் போவதுமில்லை. சரியான சாட்சி யங்களும் அனுமானங்களும் அனுபவமும் இல்லாதவைை இதைப்பற்றி விவாதிக்க இடமில்லை; அப்படிச் செய்வது உபயோகமற்ற வீண் விதண்டா வாதமே யாகும்.

எந்தப் புத்தகத்தையாவது அது சந்தேகப்படுவதற் கோ அல்லது விவாதிப்பதற்கோ ஒவ்வாத அத்தகைய பரி சுத்தமானது என்று கருதுவோமாயின், அந்த நிமிஷத்திலேயே நாம் அறிவைப் பறி கொடுத்த அடிமைகளாகி விடுகிறோம்.

* * *

"ஒரு கடவுள் அறிவுள்ள மக்களுக்கு விஷயங்களைத் தெரிவிக்கிறார்; ஆனால் அதே கடவுள் அவர்கள் அவற் றை அறிந்து கொள்வதற்காக தங்கள் அறிவை உபயோகிப் பதை அவியாத அக்கினியில் தள்ளி விடக் கூடிய பாதக மாக்கி இருக்கிறார். என்ன பெருமை! நமது அறிவைப் பயன்படுத்தும் உரிமை நமக்கிருக்குமாகில் அதன் வழி நடக்கவும் நமக்கு சுதந்திரமிருந்தே தீரவேண்டும். அதற் காக நம்மைத் தண்டிக்க எந்தத் தெய்வத்திற்கும் பாத்தியதை கிடையாது."

* * *

அறிவுள்ள ஒருவனுக்கு, வேதம் **(Bible)** மனிதன் வேலை—அதிலும் நாகரிகமற்ற மனிதனின் வேலை என்று

தெரிவதற்கு அவன் அதை வாசித்தால் மட்டும் போதும், மற்றெந்தப் புத்தகத்தை வாசிப்பது போல் அதைப்படி, மற்ற புத்தகங்களைப் போலவே அதையும் நினை, உன்னுடைய கண்ணை மூடிக்கொண்டிருக்கும் பக்தியை ஒழி, உன்னுடைய மூளையை மூடியிருக்கும் மூட நம்பிக்கையை முடுக்கி விடு, அதன் பின்னர் வேதத்தைப்படி, அப்பொழுது இத்தகைய கொடுமைக்கும் இத்தகைய அறியாமைக்கும் கர்த்தாவான ஒருவரை நீ எப்படி முற்று முணர்ந்த கடந்த ஞானியாகவும் தூய்மையும் நற்குணமும் படைத்தவராகவும் ஒரு நிமிடங் கூடக்கருதி யிருக்கக் கூடும்? என்று நீயே ஆச்சரியப் படுவாய்.”

o o o

“சிசுக்களைக் கொல்லவும், கர்ப்பிணிகளின் உடம்பைக் கிழிக்கவும் எந்தப் பேயும் உத்தரவிட்டதாகக் காணோம். இத்தகைய கொடிய செயல்களை நல்ல தெய்வங்களே செய்திருக்கின்றன. பஞ்சங்களையும், நோய்களையும் அருள் ஒழுகும் தெய்வங்களே அனுப்பியிருக்கின்றன.”

* * *

“நான் அறியாமை, நம்பிக்கை என்ற உயிரற்ற அமைதியைவிட, எண்ணம், துணிவு, செயல் என்ற புயல் காற்று, அமளி, பிரசண்ட மாருதம் இவைகளை விரும்புகிறேன்.

* * *

“மனிதனுடைய எண்ணங்களெல்லாம், அவனுக்கு அக்கம் பக்கத்திலிருந்தும், சுற்றிலு மிருந்துதான் உற்பத்தியாகின்றன. அவன் பார்த்திராததும், கேட்டிராததும், அநுபவித்திராததுமான ஒரு காரியத்தை அவனுக்கு சிந்திக்கவே முடியாது. ஆனல் அவனுக்குதான் பார்த்ததை கேட்டதை அநுபவித்ததை இன்னும் பஞ்சேந்திரியங்கள் மூலம் கிடைத்ததை மிகைப்படுத்தவோ, குறைக்கவோ, கூட்டவோ, சேர்க்கவோ, பிரிக்கவோ, சிதைக்கவோ, அழகு படுத்தவோ, விர்த்தி பண்ணவோ, பெருக்கவோ, ஒத்துப்பார்க்கவோ முடியும். அவனுக்குப் புதிதாக ஒன்

றை உண்டு பண்ண முடியாது. சக்தியின் விளைவுகளைக் கண்டமாத்திரத்தில் எல்லாம் சக்தி என்று சொல்லத் தெரியும், வாழ்வைக் கண்டவன் அழியா வாழ்வை நினைத்தல் கூடும். காலத்தைப்பற்றிச் சிறிது தெரிந்தவுடன் அழியா நித்யத்தைப் பற்றிப் பேச முடியும், அகங்காரத்தையும், பொருமையையும், கோபத்தையும், பார்த்ததினுல், பேயைப் பற்றி பேசுதல் கூடும். வாழ்க்கையின் கவலைகளுக்கிடையே சிறிதளவு இன்பங்களை அநுபவிப்பதினுல் மோக்ஷத்தைப் பற்றி பேசுகிறுன்; கஷ்டம், நோய் இவற்றைப் பல விதத்திலும் அநுபவித்தலே நரகத்தைப் பற்றிப் பேசச்செய்கிறது. என்றுலும் இத்தகைய எண்ணங்களுக் கெல்லாம் அடிப்படையான உண்மையொன்று இருக்கிறது; ஆனுல் அது அடிப்படை மட்டுந்தான், மேக்கட்டிட மெல்லாம், மேற் கூறியவாறு எண்ணங்களைக் குறைத்தலோ, கூட்டலோ, பெருக்கலோ, கழித்தலோ, சேர்த்தலோ, பிரித்தலோ ஆகிய செய்கைகளால் ஏற்பட்ட கட்டுமானம்தான்.

"எனவே இந்தக் கட்டிடம் மனிதன் தன்னுடைய பஞ்சேந்திரியங்கள் மூலம் கிடைத்த காட்சிகளைத் தாறுமாறுகச் சேர்த்திருப்பதைத் தவிர வேறல்ல. உதாரணமாக ஒரு சிங்கத்திற்கு கழுகினுடைய சிறகுகளையும், காட்டெருமையின் குளம்புகளையும், குதிரையின் வாலையும் ,கங்காருவின் வயிற்றையும், யானையின் துதிக்கையையும் கொடுத்து பாருங்கள். நாம், உண்மையில் இல்லாத ஒரு பயங்கரமான மிருகத்தை நமது மனதில் சித்திரிக்கிறேம். எனினும் இம் மிருகத்தின் வெவ்வேறு அவயவங்களும், உண்மையில் இருக்கின்றன. மனிதன் படைக்கும் தெய்வங்களும் இவ்விதம்தான் ஏற்படுகின்றன. இயற்கைக்கு அப்புறம் மனிதன் தனது எண்ணத்தாலும் கூடப் போகமுடியாது. அதற்கு மேல் ஏறவாவது, கீழே விழவாவது முடியாது."

* * *

" பல யுகங்களாக மக்கள் நோயாளிகளையும் பைத்தியக்காரர்களையும், பேய் பிடித்தவர்களாகக் கருதினர். இந்தப் பேய்களைப் பயங்காட்டி ஓட்டுவதே வைத்ய சிகிச்சையாக இருந்தது. இதற்காகப் பூசாரிகள் ஓ! வென்றலர்வதும், பல விதமான கூக்குரல்கள் செய்வதுமாக இருந்தனர். பல விதமான வாத்தியங்களை ஊதுவர்; தம்பட்டங்களை அடிப்பர்; அத்துடன் காட்டுத்தனமாக கத்துவர்; ஊளையிடுவர். ஒன்றிலும் மாயாவிட்டால் அதனிலும் அதிக சக்தியுள்ள ஒரு தேவதையின் உதவியை நாடுவர்."

* * * *

காட்டு மிராண்டித்தனம் விலகி நாகரீகம் அடைய அடைய ஒருவன் சிறிது சிறிதாக தனக்கு மரத்தினாலும் கல்லினாலும் செய்த விக்கிரகங்களிடத்திலுள்ள நம்பிக்கையை விலக்குகிறான். அதற்குப் பதிலாக பலவிதமான தேவதைகளைக் கொண்டு வருகிறேன். இன்னும் அறிவு வளர வளர, இக்குட்டித் தேவதைகளையும் புறக்கணித்து விட்டு, சர்வ வல்லமையும் வியாபகமுமுடையதாகக் கருதுகின்ற ஒரு தெய்வத்தை ஏற்றுக்கொள்ளுகிறான். இப்பெரிய தேவதை இயற்கைக்கு மேலானதாகக் கருதி அது தனக்கு உதவி செய்வதற்குக் கைம்மாருக தனது வணக்கத்தையும், புகழ்ச்சியையும், தாராளமாக வழங்குகிறான் கடைசியாக இத்தெய்வமும் காரியத்தில் கைவிட்டு விடுகிறது. யாவற்றையும் கடந்து அநாதியாக நிற்கும், பரம் பொருள் எக்குத் தேடியும் அகப்படவில்லை ஆதியந்தமற்றதாகக் கூறும். அப்பொருளைச் சிந்திப்பதற்குக் கூட இடமில்லை. இதன் பின்னர் மனிதன் தன்னைச் சுற்றியுள்ள விஷயங்களைத் தெரிந்து தன் கையே தனக்குதவி என்றதை உணர்ந்து நடக்க முன் வருகிறான்.

* * * *

கடவுள் இப்பிரபஞ்சத்தை சிருஷ்டித்தது உண்மையானல், அவர் அப்படி சிருஷ்டிக்க ஆரம்பித்த காலமொன்று இருக்க வேண்டும் அதற்கு முன்னே ஒன்றுமில்லாத அதாவது இந்தக் கடவுளைத் தவிர்த்து, யாதொன்றுமே இல்லாத ஒரு நித்யமான

கால மிருந்திருக்க வேண்டும். இந்தக் கொள்கையின் பிரகாரம் இந்தக் கடவுள் ஒரு நித்யமான காலத்தை ஒன்றுமே யில்லாத சர்வ வியாபகமான காலியிடத்தில் சுத்த சோம்பேறியாகக் கழித்திருக்க வேண்டும்.

* * * *

"கடவுள் இப்பிரபஞ்சத்தை உண்டு பண்ணினுரென்று ஒத்துக் கொண்டாலுங்கூட எதைக் கொண்டு சிருஷ்டித்தார்–என்ற கேள்விக்கிட மிருக்கிறது. ஒன்றுமில்லாததிலிருந்து உண்டாக்கி யிருக்க முடியாது. குயவனுக்குப் பானை செய்யக் களிமண் வேண்டும். சுத்த சூன்யத்தை இந்தப் பஞ்சத்தை சிருஷ்டிப்பதற்கேற்ற சடப் பொருள்களாகக் கருத முடியாது. கடவுள் மட்டுமே இருந்ததினுல் கடவுள் தன்னிலிருந்தே இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்திருக்க வேண்டுமென்று ஏற்படுகிறது. இந்தப் பிரபஞ்சம், பொருள் தன்மையுடையது. இது கடவுளிட மிருந்து உண்டானுல் கடவுள் பொருள் தன்மை யுடையவரென்று ஏற்படுகிறது.

இக்காரணம் கருதியே, மைலீட்ஸ் நகர கிரேக்க ஞானி அனுசி மாண்டார் என்பவர் "ஆதியந்தமற்ற சர்வ வியாகபப் பொருள் அழுகிக் கரைவதினுலேயே சிருஷ்டி ஏற்படுகிறது" என்றுர் போலும்!

o o o

# கோயில்கள் சாதித்ததென்ன?



ஆலயம், அந்தஸ்தையும் ஆடம்பர வாழ்வையும் துறக்கச் செய்தது. எந்தெந்தப் பொருள்கள் வாழ்வை அங்கீகரித்து வள மாக்குகிறதோ, அவைகளை ஐம்புலன்களால் அனுபவிக்கப்படும் இன்பத்தை, காதலின் கனிவை, இதய இன்பத்துளிகளை, மனைவி மக்களின் அன்பணைப்பை, ஆசை முத்தங்களைத் துறக்கச் செய்தது.

* * *

ஆலயம்; ஆண்டவனிடமிருந்து தெய்வீகச் சக்தியை பெற்றிருப்பதாக நடித்தது, மரணத்தின் வழியையும், அழியாத இன்ப வீட்டின் இருப்பிடமும் தனக்குத் தெரியும் என்று கூறியிருக்கிறது. மோட்சத்தைப் பெறும் வழி பக்திதான் என்று போதித்திருக்கிறது. இதை நம்பிய கண்மூடி வைதீகர்கள் தேவர்களாவர். சந்தேகம் கொண்டோர் எரிந்து சாம்பலாவார் என்று கர்ஜித்தது. ஆகவே ஆலயம், விசாரணை அறிவு, ஆராய்ச்சி, சிந்தனை முதலிய வற்றின் விரோதியானது. அதனால்தான் என் விசாரணை? ஆராய்ச்சி எதற்கு? சிந்திக்க வேண்டிய அவசியமென்ன? என்ற கேள்விக் கணைகளைத் தொடுத்தது. உலகையே தன் பாதங்களில் விழும்படி செய்ய முனைந்தது. அப்படிச் செய்யபலாத்காரத்தைத் துணையாக்கிக் கொண்டது. வாளை யேந்திக் கையில் பிடித்துக் கொண்டது. நெருப்பு மூட்டிய தீக்குண்டங்களைத் தயார் செய்து வைத்துக்கொண்டது. இருப்பு விலங்குகளை கைகளில் மாட்டியது. பலி பீடங்களை உண்டாக்கியது. இது போன்ற பல வேதனை தரும் கருவிகளைக் கண்டு பிடித்து உபயோகித்தது.

* * *

ஆலயங்களினால், மத நீக்கம் செய்தோர் நாடு கடத்தப்பட்டோர், உடலுறுப்புக்களை இழந்தோர், சித்திரவதை செய்யும்

சிறைச்சாலைக்குள் நுழைந்தோர், கண் பிடுங்கப் பட்டோர் நெருப்பிலே தள்ளப்பட்டோர், சிலுவையில் அறையப் பட்டோர், தூக்கு மரத்திலே தொங்கவிடப் பட்டோர் மனித இனத்திலே ஆயிர மாயிரம் பேர்கள்! இந்த மாபெரும் அறிவாளிகளின், மாவீரர்களின், வாழ்வை வதக்கி வாட்டியது. அழித்தது, ஏன் அவர்களை ஒழித்தது. அந்த ஆலயங்களுடைய வேதனை என்னும் கொடிய விஷம் மனிதனுடைய ஒவ்வொரு நாடி நரம்பையும் தாக்கி யிருக்கிறது. எல்லாத் துன்பங்களையும் உண்டாக்கியது. மனிதன் எவ்வளவு கொடுமைகளைத் தாங்க முடியுமோ அந்த எல்லையையும் தாண்டச் செய்துள்ளது.''

* * *

இவ்வுலகில் பல மதங்கள் இருக்கின்றன; இந்த மதங்களின் குழுக்களும் நடைபெறுகின்றன. இந்தக் குழுவினை நடத்தும் குருமார்கள் ஆயிர மாயிரம் தடவைகள் ஒருவர் குடுமியை மற்றவர் பிடித்துக் கொண்டு விவாதித் துள்ளனர். போப்பாண்டவர்களும், புரோகிதர்களும், அர்ச்சகர்களும் தங்கள் கோட்பாடுகளை விளக்கி யிருக்கின்றனர்; புதிய புதிய விளக்கங்களும் தந்துள்ளனர். மற்றவர் உரிமையை மறுத்துள்ளனர். ஆனால் எந்தவிதமான உபயோகமான உண்மையைக் கண்டு பிடித்தனர்? என்ன உண்மையை உணர்த்தினர்? மனிதனின் சிந்தனைச் செல்வத்திற்கு ஏதாவது சேர்த்துள்ளனரா? அல்லது அறிவு வளத்தை அதிகரித்தனரா?'' ''உணவு உண்டாக்கும் வழியினைக் கண்டு பிடித்தனரா? அல்லது காண்பித்தார்களா? மனிதன் பசியைப் போக்க என்ன வழியினைக் காட்டினார்கள்? ஆனால் பாலஸ்தீனத்திலே வாழ்ந்த ஒரு குடியானவனின் பெண்ணை, ''ஆண்டவனின் மாதா'' என்று கண்டுபிடித்தனர். இதை எப்படி நிரூபிப்பது என்று கேட்டவர்களுக்கு ஒரு நூலை எழுதிவைத்து ஆதாரமாகக் காட்டி, இது தெய்வீகம் பொருந்தியது என்றனர்?

* * *

ஆண்டவனின் தெய்வீக அருள் எங்களிடம் தாண்டவமாடு கிறது என்று பொய்கூறி, இந்தப் புண்ணிய நூலில் எல்லா அறிவும் இருக்கிறது என்றும், மனிதன் வாழவேண்டிய வழிகளை எல்லாம் இது எடுத்துக் கூறுகிறது என்றும், இந்தப் புண்ணிய நூலைத் தவிர மற்ற நூல்கள், கடவுளின் கதைகள் - தோத்திர ஸ்லோகங்கள் இவைகளைத் தவிர, மற்ற நூல்கள் செல்லாத காசுகளாய்க் கருதப்பட்டு வந்தன. பைபிளை மறுத்துக் கூறும் ஏடுகளுக்கு விஷமத்தனமானவை என்ற பெயர் சூடப்பட்டது. ஆனால் பைபிளைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு ஆடுபவைகளை, முக்கியத்துவம் நிறைந்த நூலாகக்கருதப்பட்டது. அதாவது பக்தி, மௌடிகம், குருட்டு நம்பிக்கை, இவைகளுக்கு முதலிடம் தரப் பட்டது. அத்துடன் " கண்ணை மூடிக்கொள்! வேதாந்தம் பேசு! மணியை உருட்டு! என்? எதற்கு? என்ற கேள்விகளைப்போடாதே! உன் ஆன்மாவைக் காப்பாற்று" என்று ஆலயங்கள் கட்டளை யிட்டன.

0 0 0

இந்தக் கோயில்கள், "உடலை அறுத்துப் பார்க்கக்கூடாது. பிணங்களைப் பிளந்து பார்க்க நான் சம்மதிக்க மாட்டேன். மனிதனுக்கு நோயைக் குணப்படுத்த உரிமை தந்தது யார்? நோய் நீங்க வேண்டுமானால், புரோகிதரிடம் செல்; அவர் ஆண்டவன் அருள் பெற்று உனக்குக் குணம் உண்டாக்குவார்" என்று நம்பியிருந்தது.

0 0 0

புரோகிதர்களும், மதவாதிகளும் மாதரின் இளகிய இதயத்தை, மென்மையான தன்மையைப் பயன் படுத்திக்கொண்டு, அந்த அபலைப் பெண்களின் அச்சங்களின் மீதும், நம்பிக்கைகளின் மீதும் கொடுத்தனர். அட்டைபோல் அவர்கள் இரத்தத்தை உறிஞ்சி உப்பினர். உலகின் பாவங்களுக்குக் காரணம் பெண்கள் தான் என்றனர். அவர்களுக்கு அடிமையின் பண்பாகிய கூச்சத்தையும், இழந்த தன்மையையும் தாழ்வு மனப்பான்மையையும் உப

தேசித்தனர். அந்தோ அந்தப் பெண்களுக்கு, அறியாமைகளும், அற்புதங்களும், பொய்களுமே. அறிவுத் தீனியாக வைத்தனர். அவர்களின் அறிவு வளரா முடியாதபடி மூளையைக் குழப்பிக் கொண்டேயிருந்தனர்.

o o o

ஆலயங்கள், வாணிபம், வியாபாரம் இவைகளின் வைரியாக விரோதியாக இருந்தது. பணத்திற்கு வட்டிவாங்கும் முறையை பகிஷ்கரித்தது. பணத்திற்கு வட்டி கொடுக்காமல் முன்னேற்றம் என்பது முடியாத காரியம், நீராவிக்கப்பல்கள், பெரிய பெரிய இயந்திர ஆலைகள்; இருப்புப் பாதைகள்—இவைகள் அத்தனையும் கடனாகப்பெற்ற பணத்தினால்—அதாவது வட்டி வழங்கப்படும் என்று உறுதி தரப்பட்டும், ஒரு அளவு கொடுக்கப்பட்டும் பெற்ற பணத்தினால்தான் கட்டப்பட்டவை.

o o o

அச்சம் துவேஷம் ஆகியவற்றை அழிக்க கங்கணம் கட்டிக் கொண்டவர்களுக்கு; காட்டுமிராண்டிக் கடவுளர்களை அவர்களின் சிங்காதனங்களிலிருந்து தூக்கி எறிந்தவர்களுக்கு, வெறுப்பு என்னும் அழியாத பெரு நெருப்பை அணைத்தவர்களுக்கு, அடிமை சங்கலியின் ஒவ்வொரு வளையத்தையும் தூள் தூளாக உடைத்தெறிந்தவர்களுக்கு, விடுதலை நாடுகளை நிறுவியவர்களுக்கு, நியாயமான சட்டதிட்டங்களை உண்டாக்கியவர்களுக்கு, போர்க்களங்களில் போராடி வீழ்ந்தவர்களுக்கு, சிறைச்சாலையை தன் ஆலயமாக ஆக்கிக்கொண்ட ஆண்மையாளருக்கு, தூக்கு, மேடைகளை தங்கள் இரத்தத்தால் தூய்மை படுத்தியவர்களுக்கு பகுத்தறிவின் தூதுவர்களுக்கு உண்மையின் சீடர்களுக்கு, விடுதலை போர் படைத்தலைவர்களுக்கு, உண்மை ஒளியை உயரத் தூக்கிப் பிடித்து, அந்த ஒளியை உலகம் முழுவதும் நிரப்பினவர்களுக்கு, நாம் அனைவரும் நன்றி செலுத்தியாக வேண்டும்!

---

ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1

Not Pictures 938